வருடச் சந்தா போஸ்டேஜ் உள்பட ரூ. 4

[ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேர்ந்தவர்கள்
இதற்காகத் தனிச் சந்தா செலுத்தவேண்டா]

# ஸ்ரீராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

— 9 —

இறைவனைக்காணு மிதயத் திருள்கெட * ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடி தாள்கள் * நெஞ்சத்
துறையவைத்தாளு மிராமாநுசன் புகழோதும் நல்லோர்
மறையினைக்காத்து * இந்தமண்ணகத்தே மன்ன வைப்பவரே.

மதராஸ்
ஸத்கிரந்த பிரகாசன சபையின் வெளியீடு

கிடைக்குமிடம்: P.B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

10—5—1949

# அடியேன் செய்யும் விண்ணப்பம்.

(ஸ்ரீமான். K. திருவேங்கடாச்சாரியர், அட்வொகேட், மதராஸ்.)

ஸ்ரீ ஸ்வாமி ஆச்சான்பிள்ளை அஷ்டாத்யாயி யெழுதிக்கொண்டிருந்த நாளில் அடியேன் யாத்ருச்சிகமாய் கூட இருக்க நேர்ந்தது. அப்போதே வாசித்துப்பார்த்துப் பரமானந்தமடைந்தேன். அந்த க்ரந்தத்தின் முடிவில் 105-வது பாராவில் ஸ்வாமியே பலருடைய அபிப்ராய பத்ரிகைகளைக் கோரியிருப்பதால் பல விடங்களிலிருந்தும் பெரியார்கள் பலர் அவசியம் இதற்கு மதிப்புரைகளை ஏராளமாக அனுப்புவார்களென்று நினைத்த அடியேன் அப்போதே ஸ்வாமியிடத்தில் ஒரு விண்ணப்பம் செய்துகொண்டேன், அதாவது "இது ஸம்பந்தமாக வரும் கடிதங்களையெல்லாம் அடியேனிடமே அனுப்பிவிட்டால் எல்லாவற்றையும் அடியேனே அச்சிட்டு வெளியிடுகிறேனென்று." ஸ்வாமியும் இதற் கிசைந்து இது ஸம்பந்தமாகவரும் ஸ்ரீமுகங்களை யெல்லாம் அடியேனுக்கே அனுப்பிவருகிறார். ஒவ்வொன்றையும் அடியேன் வாசித்துப்பார்த்ததில் பல விஷயங்களை உணர்ந்துகொண்டேன். சிலர் விரிவாக எழுதியிருந்தாலும் அவையும் அவசியம் வெளிவரவேண்டியவைகளேயென்று அடியேன் நினைத்து அநேகமாய் எல்லாவற்றையும் வெளியிட்டிருக்கிறேன். அஷ்டாத்யாயியணிகலன் என்னும் பெயர்பூண்ட புத்தகத்தில் அந்த ஸ்ரீமுகங்களெல்லாம் பிரசுரமாகியிருக்கின்றன. ஒன்றிரண்டு ஸ்ரீமுகம் மாத்திரம் வெகு விஸ்தாரமாயிருக்கிறதென்று பூர்த்தியாக வெளியிடப்படவில்லை. இன்னமும தினப்படியாகப் பல பெரியார்களுடைய ஸ்ரீமுகங்கள் வந்துகொண்டிருக்கின்றன. அவற்றை மற்றொரு ஸமயம் வெளியிடலாமென்று நினைவு.

10 நாள்முன்கிடைத்த சித்திரை மாதத்து ஸுதர்சன பத்ரிகையில் (2-5) ராப்பரில் ஸ்ரீமத் புத்தூர் அட்வகேட் ஸ்வாமியவர்கள் அஷ்டாத்யாயியை மறுத்து ஷோடசாத்யாயி தாம் எழுதிவருவதாகவும், அதில் தம்முடைய பக்ஷத்திற்கு ஸாதகமாக அசைக்கமுடியாத ப்ரமாணங்கள் காட்டப்படுவதாகவும், மற்றும்பல அருமையான ஆராய்ச்சிகளும் அதில் வெளிவருவதாகவும் தெரிவித்திருக்கிறார்கள். அவர்கள் காட்டும் ப்ரமாணங்கள் அசைக்கமுடியாதவையோ அசைக்கக்கூடியவையோ அதை மத்யஸ்தர்களான மஹான்களன்றோ முடிவுசெய்யவேண்டும். பல ஆராய்ச்சிகளை வெளியிடுவதாக எழுதலாம்; அருமையான பல ஆராய்ச்சிகளை வெளியிட்டிருக்கிறேனென்று அட்வகேட்டானவொருவர் தாமேயெழுதிக்கொள்வது பொருத்தமாகுமா? தமது பத்ரிகையின் ராப்பர் 4 பக்கங்களிலும் விஷயங்களை அச்சிட்டு வருகின்ற அவர்கள் இந்த மாதத்துப் பத்திரிகையில் ஒரு பக்கம் பூராவும் காலியாகவே விட்டிருக்கிறார்கள். ஷோடசாத்யாயி வெளியிடப்போகிறேனென்பதற்கு ஏறக்குறைய ஒருபக்கம் செலவு செய்திருக்கிறார்கள். இவர்கண்ட அசைக்கமுடியாத பிரமாணங்களை மேற்படி இரண்டு பக்கங்களில் எவ்வளவோ எழுதியிருக்கலாமே. மேற்படி புத்தூர் அட்வொகேட்ஸ்வாமியவர்களே சதுச்லோகீவியாக்கியானம் முதலிய சில நூல்களைப் பெரியவாச்சான்பிள்ளையின் அருளிச்செயலாக சென்ற மார்கழிமாதத்தில் வெளியிட்டுவிட்டு, பிறகு சில மாதங்கள் கழிந்தபின் "பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்ததென்று தவறாக எழுதிவிட்டதாகவும் நயனாராச்சான்பிள்ளையே ஸாதித்ததாகப் பிறகு தெளிந்துகொண்டதாகவும்" பிரசுரம் செய்திருக்கிறார்கள். இதை யாவரும் கவனிக்கவேணும். இதனால் உலகுக்கு ஒரு மருமம் நன்கு விளங்குகிறது; அதாவது, க்ரந்தங்களில் ஆச்சான்பிள்ளை யென்கிற திருநாமத்தைக் கண்டவுடனே அவரைப் பெரியவாச்சான்பிள்ளையாகவே பிரமிக்கிறவொரு மருள் அந்தபரம்பரையாக உலகில் வேரூன்றியிருக்கிறதென்பதே. இதுவேதான் இந்த ஸ்வாமியின் ஷோடசாத்யாயியினாலும் ஊர்ஜிதமாகப்போகிறதென்பதை விரைவில் உலக முணரும்.

(இதன் தொடர்ச்சி ராப்பர் பக்கம் 3-ல் காண்க.)

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 9.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10–5–1949<br>விரோதிஹூ சித்திரைமீ | 9-வது பகுதி. |
|---|---|---|


ஸ்ரீ:

## எம்பெருமானாரும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியும்

---

நமது ஸ்ரீ பாஷ்யகாரர் பெரும்பாலும் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளைத் தழுவியே ஸ்ரீ பாஷ்யம் கீதாபாஷ்யம் முதலியவற்றை அருளிச் செய்ததாக நம்முன்னோர்கள் திருவுள்ளம்பற்றி யிருக்கின்றார்கள். "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்க விடுவர்" என்று ஆசார்ய ஹ்ருதயத்தில் ஸ்பஷ்டமாகவும் பணிக்கப்பட்டுள்ளது. இதற்குச் சான்றாக நாம் பல விடங்கள் காட்டி யிருக்கிறோம். இப்போது ஒன்றிரண்டிடம் காட்டுகின்றோம்.

பகவத் கீதையில் (15—18) * யஸ்மாத் க்ஷரமதீதோஹம் * என்கிற ச்லோகத்தில் * அதோஸ்மி லோகே வேதேச ப்ரதித: புருஷோத்தம: * என்றுள்ளதன்றோ இங்கு 'லோகே வேதேச' என்றதற்கு லோகத்திலும் சாஸ்த்ரத்திலும் என்று பொருள் ஸாதாரணமாக எல்லார்க்கும் தோன்றக்கூடியது. இதர பாஷ்யகாரர்கள் இப்படித்தான் அர்த்தம் செய்திருக்கக் காண்கிறோம். ஸ்வாமி யெம்பெருமானாரோ வென்னில் தமது கீதா பாஷ்யத்தில் அங்ஙனம் பொருள் பணிக்கவில்லை. "𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌾𑌤𑍍 𑌲𑍋𑌕 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑌿𑌹𑍋𑌚𑍍𑌯𑌤𑍇. 𑌶𑍍𑌰𑍁𑌤𑍌 𑌸𑍍𑌮𑍃𑌤𑍌 𑌚𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃" [வேதார்த்தாவலோகநாத் லோக இதி ஸ்ம்ருதிரிஹோச்யதே; ச்ருதௌ ஸ்ம்ருதௌச இதி அர்த்த:] என்பது கீதா பாஷ்ய ஸ்ரீ ஸூக்தி. லோகம் என்பதற்கு கரணே வ்யுத்பத்தியினால் சாஸ்த்ரமென்றே பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது. இப்படித்தான் கொள்ள வேணுமென்று தாத்பர்ய சந்த்ரிகையில் வேதாந்த தேசிகனும் உபபாதநம் செய்தருளி யிருக்கிறார். லோக சப்தத்திற்கு இப்படி சாஸ்த்ர பரத்வம் கொண்டவர்கள் வேறுயாருமில்லை. லோகசப்தத்திற்கு சாஸ்த்ர மென்று அர்த்த முள்ளதாக கோசங்களிலும் காணப்படவில்லை. "லோகஸ்து புவநே ஜநே" என்றுதான் அமரகோசத்தி லுள்ளது. இதர கோசங்களிலும் இங்ஙனமே காண்கிறது. இப்படியிருக்க, ஸ்வாமி லோகபதத்தை சாஸ்த்ர பர்யாயமாகக் கொண்டு பொருளருளிச் செய்த

தற்கு நிதானமென்ன ? என்று பராமர்சிக்க வேணும். நம்மாழ்வாருடையவொரு ஸ்ரீ ஸூக்தியே இதற்கு மூலகாரணமென்று பெரியோர்களின் கொள்கையை இங்கு நாம் நிரூபிக்க விரும்புகிறோம்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் * ஒன்றுந் தேவுமுலகுமுயிருமென்று தொடங்கும் பதிகத்தில் (4—10—6) * போற்றி மற்றோர் தெய்வமென்னும் பாசுரத்தில் * எல்லீரும் வீடு பெற்றால் உலகில்லையென்றே * என்று அருளிச் செய்துள்ளார். இப்பதிகத்தில் ஸ்ரீமந் நாராயணனுடைய பரத்துவத்தை உபபாதித்துவந்த ஆழ்வாரை நோக்கி "ஸ்ரீமந் நாராயணனே ஸர்வேச்வரனாகில் அவன் தன்னையே ஆச்ரயிக்கும்படி எங்களைப் பண்ணாமல் இதர தெய்வங்களைத் தொழுமாறு எங்களைச் செய்துவைத்தது ஏன் ?" என்று சிலர் கேட்பதாகக் கொண்டு அவர்களுக்கு விடைகூறுவதாக இப்பாசுரமமைக்கப்பட்டுளது.

இப்பாசுரத்தில் "எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லை யென்றே" என்பதுதான் உயிராகவுள்ளது. எல்லாரும் ஸ்ரீமந்நாராயணனையே தொழப்பெற்றால் எல்லாருமே வீடு பெறுவார்கள் ; அப்படி எல்லாரும் வீடு பெற்றுவிட்டால் உலகு இல்லையாய்விடும் (அதாவது லீலாவிபூதி அடியற்றுப் போய்விடும்) ; அங்ஙனம் போகாமைக்காகவே எம்பெருமான் உங்களை இதரதேவதாபஜனம் பண்ணி ஸம்ஸாரிகளாய்த் தொலைந்துபோம்படி செய்து வைத்தான் — என்பதாக இப்பாசுரத்திற்கு ஆபாதப்ரதீதியில் பொருள் தோன்றக்கூடும். தசோபநிஷத் பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி வடமொழியில் தாம் பணித்த ஒன்பதினாயிரப்படி வியாக்கியானத்தில் இவ்விதமான பொருளையே எழுதியுள்ளார். "[illegible]" என்பவை அந்த ஸ்வாமியினுடைய வியாக்கியான பங்க்திகள்.

ஆனால், திருக்குருகைப்பிரான்பிள்ளான் நம்பிள்ளை முதலான பூருவாசாரியர்கள் தம் தம் வியாக்கியானங்களில் வெளியிட்டருளின பொருள் இங்ஙனேயல்ல. எங்ஙனே யென்னில் : உலகில்லையென்றே யென்ற விடத்தில் உலகு என்பதற்கு சாஸ்த்ரம் என்று பொருள். ப்ரபலபாபம் செய்து வைத்த நீங்களும் ப்ரபல ஸுக்ருத லப்யமான மோக்ஷத்தைப் பெற்றுவிட்டீர்களாகில் சாஸ்த்ரமரியாதையே அழிந்து போய்விடு மென்று நினைத்தே எம்பெருமான் உங்களை தேவதாந்தர ப்ரவணர்களாக ஆக்கிவைத்திருக்கிறான் ; அவரவர்கள் பண்ணின புண்யபாப ரூபகருமங்களுக்குத் தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ரமரியாதை ஏற்பட்டிருக்கிறது ; நீங்கள் முற்பிறவிகளில் ப்ரபலமான தீவினைகளைச் செய்திருக்கிறபடியால் அவற்றின் பலனாக இப்பிறப்பில் க்ஷுத்ர தேவதா பஜனம் பண்ணும்படியாக உங்களை உபேக்ஷித்திடலாயிற்று ; கொடிய பாவங்கள் செய்த உங்களையும் புண்யாத்மாக்களைப்போலே ஸ்ரீமந்நாராயண ஸமாச்ரயணமே செய்யும்படி பண்ணிவிடுவசானல் அப்போது முன்சொன்ன சாஸ்த்ரமர்யாதை அழிந்து விடுமன்றே. அங்ஙனம் அழியாமைக்காகவே உங்களை இங்ஙனே நிறுத்திவைத்தது — என்பதாகவே ஆழ்வார் திருவுள்ளம் பற்றிய பொருளென்று பூருவாசாரியர்கள் உபபாதித் தருளுகிறார்கள். வேதாந்த தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் * [illegible]— தத்தத் கர்மாநுரூபம் பலவிதரணத : * என்று இவ்வர்த்தத்தையே வெளியிட்டருளினார்.

ஆகவே, ஆழ்வார்திருவுள்ளத்தால் உலகு என்பதற்கு சாஸ்த்ரமென்னும் பொருள் தேறிவிட்டபடியால் இதையடியொற்றியே ஸ்வாமி பாஷ்யகாரர் * அதோஸ்மி லோகே வேதே ச * என்றவிடத்தில் லோக சப்தத்தை சாஸ்த்ரபரமாக நயிப்பித்தருளினாரென்று

அறியக் கிடக்கிறது. இந்த கீதாச்லோகத்தை அப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரிய வாச்சான்பிள்ளையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையும் எடுத்துக்காட்டியருளியுமிருக்கிறார்கள்.

எம்பெருமானார்க்கு முன்னே ஆளவந்தாரும் லோகசப்தத்தை சாஸ்த்ரபரமாக ப்ரயோகம் செய்தருளினார்; ஸ்தோத்ரரத்நத்தில் (23) * ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே * என்றவிடத்திற்கு வியாக்கியானஞ் செய்தருளாநின்ற பெரியவாச்சான்பிள்ளை—" ஆயிர மடங்கு என்றால் பண்ணப்படாதது யாதொரு நிந்திதகர்மமுண்டு, அதிபாதக மஹா பாதகாதிகள், அது சாஸ்த்ரத்திலுமில்லை;........அநுஷ்டாதாக்கள் பக்கலில்லாத நிஷித்தங்களும் சாஸ்த்ரத்தில் காணலாமிறே." என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகனும் ஸ்தோத்ர பாஷ்யத்தில்—" [illegible] விவக்ஷா" என்றருளிச் செய்தனர். இவற்றால் ஆளவந்தாரும் லோகசப்தத்தை சாஸ்த்ரபரமாகவே கொண்டாரென்று விளங்காநின்றது.

இப்படி ஆளவந்தாரும் எம்பெருமானாரும் கொண்டது ஆழ்வாரருளிச் செயலையடியொற்றியே யென்பது நிஸ்ஸந்தேஹம். இதனை மற்றுமொரு நிரூபணத்தினால் நிலைநாட்டுகிறோம்.

உபநிஷத்து பரப்ரஹ்மலக்ஷணம் கூறும்போது * யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே * இத்யாதி வாக்யத்தினால் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றைமாத்திரமே சொல்லிவைத்திருக்கிறது. ஆனால் ஸ்வாமி யெம்பெருமானாரும் ஆளவந்தாரும் மோக்ஷ ப்ரதத்வ மென்னும் ஒரு தொழிலையும் தனிப்பட அருளிச் செய்கிறார்கள்; எங்கே யென்னில்; ஸ்ரீ பாஷ்யத்தின் மங்கள ச்லோகத்தில் * அகில புவந ஜந்ம ஸ்தேம பங்க * என்று ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றையுஞ் சொல்லிவைத்து உடனே இரண்டாவது பாதம் * விநதவிவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே* என்பதாக அருளிச் செய்கிறார். இதனால் மோக்ஷ ப்ரதத்வம் சொல்லப்படுவதாக ச்ருதப்ரகாசிகாசார்யர் விவரித்தருளுகிறார். ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் (ச்லோ. 20.) * ஜகதுத்பவஸ்திதி ப்ரணச ஸம்ஸார விமோசந * என்று, ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களைச் சொல்லிவைத்து, மேலே ஸம்ஸார விமோசந பதத்தினால் மோக்ஷப்ரதத்வத்தைத் தனிப்படவருளிச் செய்கிறார். * யதோவா இமாநி பூதாநி * இத்யாதியான உபநிஷத் வாக்யத்தில் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை மாத்திரமே சொல்லிவைத்து மோக்ஷ ப்ரதத்வத்தைச் சொல்லாதது ஏனென்னில், இதை ரக்ஷணத்திலோ ஸம்ஹாரத்திலோ அடக்கிவிடலாமென்கிற எண்ணத்தினாலேயே. ஆளவந்தாரும் எம்பெருமானாரும் அதைத் தனிப்பட அருளிச் செய்வது எதனாலென்னில்;

திருவாய்மொழியில் நம்மாழ்வார் * பத்துடையடியவர்க் கெளியவன் * என்னும் பதிகத்தில் இரண்டாம் பாட்டில் * வீடாந் தெளிதருநிலைமைய தொழிவிலன் * என்பதனால் மோக்ஷப்ரதத்வத்தைச் சிறப்பாக அருளிச் செய்தார். மோக்ஷமாகிற தெளிந்த நிலத்தைத் தருதலாகிற மோக்ஷப்ரதத்வ நிலைமையை எப்போதும் உடையவன் என்பது இந்தப் பாசுரத்தின் பொருள். தவிரவும் மோக்ஷப்ரதத்வத்தை உபதேசிப்பதற்கென்று தனியே ஒரு பதிகமும் அருளிச் செய்துள்ளார் நம்மாழ்வார்; அது * அணைவதரவணைமேல் * (2-8) என்பது. ஆகவே நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தில் எம்பெருமானுக்குச் சிறந்த லக்ஷணமாக மோக்ஷப்ரதத்வம் குடிகொண்டிருக்கின்றதென்பதை யறிந்தே ஆளவந்தாருமெம்பெருமானாரும் அதுதன்னைச் சிறப்பாக வெடுத்தருளிச் செய்கிறார்களென்று அறியத்தக்கது.

இங்ஙனேயுள்ள மற்றும் பல விஷயங்களும் ஸமயங்களில் வெளியிடப்படும்.

---

## ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் புதிய வெளியீடுகள்.

---

ஷை ஸபையின் வெளியீடு நெம்பர் 11 முதல் 20 வரையில், திருவாய்மொழி வியாக்கியானமான பகவத் விஷயம் ஈடு முப்பத்தாறாயிரப்படி வெளியீடுகட்கானவை. இதில் நெ. 11 முதற்பத்தும், நெ, 16 ஆறும்பத்தும் முன்னமே வெளிவந்திருப்பவை. நெ. 12 இரண்டாம் பத்து அச்சாகி வருகிறது, அடுத்த மாதத்தில் முடிவுபெற்று வெளிவரும். 1, 2 ஆகிய இரண்டு பத்துக்களுக்கும் பதவுரை முதலியனவும், பிரமாணத்திரட்டு பொழிப்புரையும் அநுபந்த ரூபமாக அச்சாகி வருகின்றன. அவையும் ஆடிமாதத்தில் வெளிவரும்.

நெ. 22. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமவுரை. ஸஹஸ்ரநாமத்திற்கு பட்டருடைய பாஷ்யத்தை யநுஸரித்த மிகத்தெளிவான பொருள்விளக்கம் வெளிவந்துவிட்டது. விலை 1 ரூபா. ஸபைமெம்பர்கள் யாவர்க்கும் அனுப்பியாய்விட்டது.

நெ. 23. திவ்யப்ரபந்தக்கண்ணாடி. நாலாயிர திவ்யப்ரபந்தப் பாசுரங்களிலிருந்து எடுத்தாளப்படும் மேற்கோள்கள் (துண்டு துண்டானவை) எந்த ஆழ்வாருடைய எந்தப்பிரபந்தத்தில் எந்த இடத்திலிருக்கின்றதென்பதை எளிதாகத் தெரிந்து கொள்வதற்கு உரிய ஸாதனமாக இது வெளியிடப்பட்டிருக்கின்றது. திவ்யப்ரபந்தப் பாசுரங்களில் ஊற்றமுள்ளவர்களுக்கு இது எப்போதும் கையிலிருக்கத்தக்கது. விலை 0—12—0. ஸபை மெம்பர்களுக்கு அனுப்பியாயிற்று.

நெ. 24. ஸ்ரீராமாநுஜபூஷணம். நமது ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகையில் எம்பெருமானார் பெருமைகளைப் பற்றித் தலையங்க வியாஸங்களாக இதுவரை வெளிவந்தவை யெல்லாம் விசேஷித்து அடிக்கடியநுபவிப்பதற்குப் பாங்காகத் தனித்திரட்டாய் அமைக்கப்படவேண்டுமென்று சில ஆப்தர்கள் விரும்பினபடியால் அப்படிப்பட்ட வியாஸங்களெல்லாம் தொகுத்து வெளியிடப்பட்டிருக்கும் புத்தகம் இது. இத்தொகுதியில் புதிய விஷயம் யாதுமில்லை. எல்லாம் ஸ்ரீராமாநுஜனில் ஒன்றுமுதல் எட்டு வரையிலுள்ள ஸஞ்சிகைகளில் அநுபவிக்கப்பட்டவையே. ஸபை மெம்பர்கள் விரும்பினால் இது அனுப்பப்படும். அவர்கள் 0—4—0 ஸ்டாம்பு கவரில்வைத்து காஞ்சீபுரம் க்ரந்தமாலா ஆபீஸுக்கு அனுப்பவேண்டும். மற்றவர்களுக்கு 0—12—0 விலைக்குக் கொடுக்கப்படும்.

நெ. 25. ஸ்ரீ தேசிகரஹஸ்யமாலை—முதற்பகுதி. ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்த முப்பத்திரண்டு ரஹஸ்யங்களும் தமிழ் லிபியில் திருத்தமான பதிப்பு தற்காலம் எங்கும் கிடைப்பதில்லை யாகையால் அவை அச்சிடப்பட்டு வருகின்றன வென்று முன்னமே தெரிவித்திருக்கிறோம். அதில் முதற்பகுதி அச்சாகி முடிந்துவிட்டது. இந்த ரஹஸ்யங்களுள் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரமென்பது மிகவும் முக்கியமான காலக்ஷேப க்ரந்தமாகையால் அந்த மஹாக்ரந்தத்திற்கு முற்பட்ட [ஸம்ப்ரதாய பரிசுத்தி முதல் ரஹஸ்யத்ரய சுளகமிறுதியாகவுள்ள] ரஹஸ்யங்கள் முதற்பகுதியாக வெளியிடப்படுகிறது. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரம் இடைப்பகுதியாக வெளியிடப்படும். அதற்குப் பிற்பட்ட ரஹஸ்யங்களெல்லாம் கடைப்பகுதியாக வெளியிடப்பெறும். முதற்பகுதியின் விலை 1—4—0 ஸபை மெம்பர்களுக்கு இது ஜூன்மாதத்தின் முடிவில் அனுப்பப்படும்.

## விசேஷ அறிவிப்பு.

ஆச்சான்பிள்ளை யருளிச் செய்த பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை என்னுமிரண்டு ரஹஸ்யங்கள் மறுபதிப்பாகி முடிந்திருக்கின்றன. ஏற்கெனவே இது கிடைக்கப்பெருத மெம்பர்கள் நமக்குத் தெரிவித்துப் பெற்றுக் கொள்வது. முன்புகிடைக்கப் பெற்றவர் களும் விரும்பினுல் ஒரு ரூ. அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

| | |
|---|---|
| மதராஸிலுள்ளவர்கள் | இவையெல்லாம் கிடைக்குமிடம்:— |
| C. ராதாகிருஷ்ணய்யா, | க்ரந்தமாலா ஆபீஸ், |
| 147, அண்ணுபிள்ளைத் தெருவில் | காஞ்சீபுரம். |
| பெற்றுக்கொள்வது. | |

## அஷ்டாத்யாயி யணிகலன்.

சென்ற மாதம் வெளிவந்த ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயியிலுள்ள ஆராய்ச்சிகள் யாவும் ஆச்சரியமானவை யென்றும் மிகவும் கொண்டாடத்தக்கவை யென்றும் மடாதிபதி கள் வித்வான்கள் பண்டிதர்கள் மற்றும் பெரியார்கள் பலர் அன்போடும் ஆனந்தத்தோடும் எழுதியனுப்பிய பத்திரிகைகளெல்லாம் ஒரு புத்தகமாக வெளியிடப்பட்டிருக்கின்றது. வாசிக்க விருப்பமுடையவர்கள் 0–4–0 ஸ்டாம்பு அனுப்பினுல் அவர்களுக்கு புக்போஸ்டில் அனுப்பப்படும். கீழ்க்கண்டவர்களிடம் கிடைக்கும்.

| | |
|---|---|
| 1. G. முஸலப்ப ரெட்டியார், B.A., B.L., | 2. K. திருவேங்கடாசாரியர், B.A., B.L., |
| Advocate. | Advocate. |
| 8, முல்லாஸாயிப்லேன், மதருஸ் 1. | No. 1, பத்ரையகார்டென் தெரு, P.T. Madras, |

## திவ்யப்பிரபந்த வியாக்கியான வெளியீடு.

(ஸம்ஸ்க்ருதம் தெலுங்கு ஹிந்தீபாஷைகளில்)

உலகில் பிறந்தவர்கள் போதைப் போக்குவதற்குப் பல வழிகள் இருந்தாலும் "கார்கலந்தமேனியான் கைகலந்த வாழியான், பார்கலந்த வல்வயிற்ருன் பாம்பணையான்— சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையினுழ்துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது". என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி பகவத் குணுநுபவத்தினுல் போது போக்குவதுதான் மிகச் சிறந்ததென்று அநுபவரஸிகர்கள் பலர் கைகண்டிருக்கிருர்கள். நாஸ்திகர்களாயிருப்பவர்களுங்கூடச் சில ஸமயங்களில் பக்திதலையெடுக்கப்பெற்று பகவத் குணங்களைப்பற்றிய புத்தகங்களை வாசிக்கவிரும்புகிருர்களென்பதை நாம் கண்டு வருகிருேம். அப்படி வாசிக்க விரும்பும் புத்தகங்களில் ஆழ்வார்களருளிச் செய்த திவ்யப் பிரபந்தங்களே தலையான ஸ்தானத்தில் நிற்கின்றன. பொருள் தெரியாமற் போனுலும் பாசுரங்களைப்

படிக்கும்போதே அற்புதமான ஆத்மானந்த முண்டாகின்றதென்று பலர் கூறக் கேட்டிருக்கிறோம். பொருளும் தெரிந்து அநுபவிக்க நேர்ந்தால் விலக்ஷணமான ஆனந்தவெள்ளம் ஆத்மாவில் பொங்கி அலையெறியுமென்பதில் ஸந்தேஹமில்லை.

வேத வேதாந்தங்கள் முதலிய ஸகல சாஸ்த்ரங்களிலும் கரைகண்டவர்களான நம் பூருவாசாரியர்களும்—[ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜர் கூரத்தாழ்வான் பட்டர் முதலான பேராசிரியர்களுங்கூட] இத்திவ்வியப் பிரபந்தங்களிலேயே போதைப் போக்கினார்களென்றால் இவற்றின் இனிமை எப்படிப்பட்டதாயிருக்கவேணும் !

கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் கோவர்த்தனம்(ஆத்ய)ரங்காசாரியர்ஸ்வாமி வடதேசத்தில் வியாபகராக எழுந்தருளியிருந்து ப்ருந்தாவனத்தில் திவ்ய தேச ப்ரதிஷ்டை செய்தருளின காலத்தில் ஸுதர்சநாசார்ய சாஸ்த்ரி என்றொரு உத்தராதிப்ராஹ்மணர் அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்தார். அவர் சதுச் சாஸ்த்ர பண்டிதர். கோவர்த்தனம் ஸ்வாமிக்கு தக்ஷிண பாஹுவாக விளங்கினவர். அவர் கோவர்த்தனம் ஸ்வாமி ஸந்நிதியில் திருவாய்மொழி வியாக்கியானமாகிய பகவத்விஷயத்தைக் காலக்ஷேபஞ் செய்தாராம். அப்போது அவருடைய உள்ளத்தில் தோன்றியதை அவரே பல ச்லோகங்களாக இயற்றி வெளியிட்டிருக்கிறார். அந்த ச்லோகங்களின் தாத்பர்யஸாரம் கேண்மின்.

“இவ்வுலகில் எண்ணிறந்த சாஸ்த்ரங்கள் தோன்றியிருந்தாலும் ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களுக்குச் சமானமான சாஸ்த்ரம் எதுவுமே கிடையாது. அவற்றுக்கு வியாக்கியானங்களை யருளிச்செய்த ஆசாரியர்களே உண்மையான ப்ராஹ்ம வித்துக்கள். அப்படிப்பட்ட திவ்யப் பிரபந்தங்களையும் வியாக்கியானங்களையும் அதிகரிக்க யோக்யமான ஜன்மமே ஜன்மம். ஐயோ நான் தமிழ்ப்பாஷைக்கு வைதேசிகனாய் யமுனைக்கரையிலே பிறந்து கெட்டேனே! ஆனாலும் அந்த மஹார்த்தங்களை ஒருவாறு கேட்கும் பாக்கியம் பெற்றோமேயென்று மகிழ்கிறேன். ஸ்ரீமந் நாராயணா! கோவர்த்தனம் ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தம் பெற்றவெனக்கு மோக்ஷப்ராப்தியில் ஸந்தேஹ லேசமும் கிடையாது. ஆனாலும் ஸ்ரீமந் நாராயணா! எனக்கு நீ இப்பிறப்பில் மோக்ஷம் கொடுக்கலாகாதென்று உன் திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பிரார்த்திக்கிறேன். என்னை நீ தமிழ்நாட்டில் பிறப்பித்து நாலாயிர அத்யாபகன் என்ற விருதைப் பெறுவித்து ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளை வாயாரக் கதறும்படிபண்ணி அப்படி பத்தெட்டு ஜன்மங்கள் கொடுத்து, பிறகுதான் என்னை நீ திருவடி சேர்த்துக் கொள்ளவேணும். இப்படி யல்லாமல், நாராயணா! எனக்கு நீ இப்போதே மோக்ஷம் கொடுத்து விட்டாயாகில் * நச புநராவர்த்ததே நச புநராவர்த்ததே * என்கிற உபநிஷத்தையும் * அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத் * என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையும் கிழித் தெறிந்துவிட்டு இந்நிலத்திற்குத் திரும்பிவந்து தாம்ரபர்ணீ தீரத்திலும் காவேரிக் கரையிலும் ஸ்ரீபெரும்பூதூர் ப்ராந்தத்திலும் பிறவிகள் எடுத்தே தீருவேன்”

என்று இப்படிப்பட்ட நிர்வேதத்தைப் பொதிய வைத்துப் பல ச்லோகங்கள் இயற்றியிருக்கிறார் அந்த ஸுதர்சநாசார்ய பண்டிதர்.

அடியேனுடைய அநுபவத்தில் நேரில் கண்டவொரு விஷயத்தையுமிங்குத் தெரிவிக்கிறேன். கீர்த்தி மூர்த்தியாயெழுந்தருளி யிராநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீ வானமாமலை

சின்னகலியன்ஸ்வாமி இரண்டாவது தடவை வடதேசயாத்திரை யெழுந்தருளினபோது பாட்னவில் தீகாகாட் என்ற ஸ்தலத்தில் எழுந்தருளி யிருந்தகாலத்தில் அடியேன் யாத்ராவசாத் (1916-ஆம் வருஷத்தில்) அங்கு விடைகொள்ள நேர்ந்தது. ஸ்ரீ ஸ்வாமியின் பரம கிருபைக்கு இலக்காகிச் சிலநாள் அங்குத் தங்கியிருக்கையில் ஸ்ரீஸ்வாமி ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளிலிருந்து யான அர்த்த விசேஷங்களை அருமை அநுதினமும் ஹிந்தியில் உபந்யஸிக்கும்படியாயிருந்தது. அதைக்கேட்ட அந்த தேசத்துப் பண்டிதர்கள் யாவரும் கண்ணுங் கண்ணீருமாயிருந்தனர். அவர்களில் தலைவரான வொருவர் சொன்னவார்த்தை இன்னமும் மறவாமலிருக்கிறது. அதாவது, *ஆஸாமஹோ சரணரேணுஜுஷாமஹம் ஸ்யாம் ப்ருந்தாவநே கிமபி குல்ம லதௌஷதீநாம், யா துஸ்த்யஜம் ஸ்வஜநம் ஆர்யபதஞ்ச ஹித்வா பேஜுர் முகுந்தபதவீம் ச்ருதிபிர் விம்ருக்யாம் * [வேதங்களாலே தேடப்படுமதான க்ருஷ்ணன் போனவழியை யாவர் சில பெண்கள் ஸ்வஜனங்களையும் அதிக்ரமித்துப் பின் தொடர்ந்தார்களோ அவர்களுடைய பாததூளியை பஜிக்கப்பாங்காக ப்ருந்தாவனத்திலுள்ள சிறு செடிகள் கொடிகள் ஓஷதிகள் முதலானவற்றில் ஏதேனு மொன்றாகப் பிறக்கப் பெறவேணும்] என்றும், * அஹம் கதம்போ பூயாஸம் குந்தோவா யமுநாதடே * [யமுனைக்கரையில் கண்ணபிரான் திருவடிகளால் மிதித்தேறின கடம்பமரமாகவோ குருந்தமரமாகவோ பிறக்கப் பெறவேணும்] என்றும் முன்னே உத்தவர் முதலானோர் ப்ரார்த்தித்ததாகச் சொல்லுகிறார்கள்; அந்த ஜன்மங்களெல்லாம் எதுக்கு? இப்படிப்பட்ட திவ்ய ப்ரபந்தங்களை யதிகரிக்கப் பாங்கான ஜன்மமன்றோ ஜன்மம்—என்றார்.

ஆகவிப்படி வைதேசிகர்களுங்கூட ஈடுபடும்படியான பெருமைவாய்ந்த திவ்யப்ரபந்தங்களின் அரிய பெரிய பொருள்களை ஸகல தேசத்தாரும் தெரிந்துகொண்டு ஆனந்திக்க வேணுமென்கிற ஆசை அடியேனுக்குத் தோன்றி, ஸம்ஸ்க்ருதம் ஹிந்தி தெலுங்கு ஆகிய மூன்று பாஷைகளிலும் திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களை யெழுதி மாதந்தோறும் வெளியிட்டு வருகின்றேன்.

ஏற்கெனவே திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை யென்கிற பெயரால் மிகவிரிவான வியாக்கியானங்களைத் தமிழில் எழுதி வெளியிட்டிருக்கிறேனென்பது யாவருமறிந்தது. அவ்வளவு விரிவாக இப்போது எழுதத் தொடங்கினால் இப்பெரிய பணி அடியேனுடைய வாழ்நாளில் பூர்த்தி யடையுமோ அடையாதோ வென்கிற ஸந்தேஹத்தினால் விரிவாக எழுதுவதை விட்டு [அதாவது, ஒவ்வொருபதமாக வெடுத்துப் பொருளெழுதுவதை விட்டு]க் கருத்துரையாக எழுதிவருகிறேன். பூர்வாசார்யர்கள் ஆங்காங்கு அருளிச் செய்துள்ள விசேஷார்த்தங்களை மாத்திரம் விடுவதில்லை. பக்தர்கள் அந்த அர்த்த விசேஷங்களை யுணர்ந்து களிப்பதன்றோ நமக்கு முக்யமான உத்தேசம். பிரதிபதார்த்தமாக எழுதினால் தமிழறியாத வைதேசிகர்களுக்கு அது சிறிதும் ரஸிக்கமாட்டா தென்பதுபற்றியும் கருத்துரையாகவே யெழுதப்படுகிறது. ஸாதாரணமாக ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்தியுடையா ரெல்லாரும் எளிதாகத் தெரிந்து கொள்ளும்படியாக லலிதமான நடையிலேயே ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் எழுதப்படுகிறது.

இந்த மூன்றுபாஷைவியாக்கியானங்களும் நம்முடைய வைதிகமநோஹரா என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகை மூலமாகவும், ஸ்ரீராமாநுஜ பத்ரிகா என்கிற தெலுங்கு பத்ரிகை மூலமாகவும், ஸ்ரீவைஷ்ணவ ஸுதா என்கிற ஹிந்தி பத்ரிகை மூலமாகவும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. மூலமான பாசுரங்களும் தேவநாகரி லிபியிலும் தெலுங்கு லிபியிலும்

அச்சிடப்பட்டு வருகின்றன. அந்தப் பாசுரங்களை வாசிப்பதும் ஒரு மஹா ஸுக்ருத மென்று அடியேனுடைய அபிப்ராயம்.

இதுவரையில் திருப்பல்லாண்டு முடிந்து பெரியாழ்வார் திருமொழியில் 100 பாசுரங்களுக்கு வியாக்கியானம் வெளிவந்திருக்கின்றது. மிகப் பெரிதான இந்த கைங்கரியம் இடையூறு ஒன்றுமின்றி விரைவில் முடிவுபெறவேணு மென்று மங்களாசாஸனம் செய்தருளவேணு மென்று பாகவதர்களின் ஸந்நிதானத்தில் ப்ரார்த்திக்கிறேன்.

ஸ்ரீவைஷ்ணவ தாஸன்
ப்ர. அண்ணங்கராசார்ய தாஸன்

## திவ்யப்ரபந்தத் திருநாமமாலை யறிக்கை.

ஆழ்வார்களின் நாலாயிர திவ்யப்பிரபந்தங்களிலிருந்து எம்பெருமானுடைய திருநாமங்களைத் தொகுத்து வெளியிடப்பட்ட திருநாமமாலை நமது ஸபை மெம்பர்களுக்கெல்லாம் கிடைத்திருக்கிறது. அதைக் கண்ட நமது ஸ்ரீ ராமாநுஜன் சந்தாதாரர்கள் பலர் "அப் புத்தகத்தைத் தனியே விலை கொடுத்து வாங்க அசக்தர்களாயிருக்கின்றோம்; எங்களுக்கும் அது கிடைத்ததாகும்படி இப்பத்ரிகைவாயிலாக அதைப் பிரசுரம் செய்துவந்தால் நல்லது" என்று தெரிவித்துக் கொண்டபடியால் அன்னவர்களின் மனோரத பூர்த்திக்காக அத்திருநாமமாலை இப்பத்ரிகையிலும் வெளியிட ஆரம்பிக்கப்படுகிறது.

## திருவாய்மொழி—திவ்யார்த்த தீபிகை.

திவ்யார்த்த தீபிகை யென்கிற விரிவான வுரையோடு கூடிய திருவாய்மொழி 7-வது பத்துவரையிலுமே (அதாவது 700 பாசுரங்களுக்கு மாத்திரமே) இதுவரையில் அச்சாகி வெளிவந்திருக்கின்றது. 8, 9, 10 ஆகிய மூன்று பத்துக்களுக்கு அவ்வுரை வெளிவரவில்லையே யென்று பலர் ஆர்த்தியோடு தெரிவித்தபடியால் அடுத்த ஸஞ்சிகை முதல் இப் பத்ரிகை வாயிலாகவே அது க்ரமேண வெளியிடப்பட்டுவரும்.

—:*:—

## ஆசார்யஹ்ருதயப் பதவுரை.

ஆசார்யஹ்ருதய மென்கிற மஹாக்ரந்தத்திற்கு நம்முடைய விரிவுரை வெளிவந்திருந்தாலும் ப்ரதிபதார்த்தவுரையில்லாமல் அதன் பொருளையறிவது அரிதென்று பலர் வருந்தினபடியால் அந்தப் பதவுரையும் இப்பத்திரிகை வாயிலாகவே வெளியிடப்படுகிறது. புத்தகங்களாயுள்ளவை பத்ரிகையில் பகுதிகளாக வெளிவராமல் தனியே முடிவுபெற்று வெளிவருவது நலமென்று தெரிவிப்பாரும் சிலருண்டு. தனியே விலை கொடுத்து வாங்க சிரமப்படுகிறவர்களுடைய ஸௌகரியத்தை யுத்தேசித்து இப்படிச் செய்யவேண்டிற்று.

ஸ்ரீ:

# நான் கண்ட நல்லவை.

(ப்ர. அ.)

ஒரு விஷயத்தை ஆராய்ச்சி செய்யப்புகுமளவில் பல புத்தகங்களைப் பார்க்க நேர்கின்றது. அப்போது பலபல விஷயங்கள் கண்ணில் படுகின்றன. அபூர்வமான விஷயங்கள் கண்டால் அவற்றை யெல்லாம் உலகர்களுமறிய வெளியிட்டுவைத்தால் உதவியாகுமென்று தோன்றியதனால் "நான் கண்ட நல்லவை" என்ற மகுடத்தின்கீழ்ப் பல குறிப்புகளை அடைவே வெளியிட்டு வருவேன். இவை ஒன்றோடொன்று தொடர்பில்லாத தனித்தனி விஷயங்களாகவே யிருக்கும். இது வொரு ஏகாந்தக் குறிப்பு என்று கொள்க.

1. குன்றத்தூரையன் குமாரரான அப்பன் ஸ்ரீநிவாஸாசார்யரருளிச் செய்ததாக (1913ஆண்டில்) தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருக்கின்ற அஷ்டச்லோகி பெரியபடி வியாக்கியானத்தில் (பக்கம் 14-ல்) வடக்குத்திரு வீதிப்பிள்ளை அஷ்டாக்ஷரதீபிகை யென்றொரு க்ரந்தம் அருளிச் செய்திருப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. "....என்று வடக்குத் திருவீதிப்பிள்ளை அஷ்டாக்ஷரதீபிகையிலே அருளிச் செய்தருளினார்" என்பது அவ்விடத்து ஸ்ரீ ஸூக்தி. அதிலேயே மேல் (66-பக்கத்திலும்) இப்படியே காட்டப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தில் மற்றொரு விசேஷமுமுள்ளது; அதாவது—

2. ஆச்சான்பிள்ளை நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதப்படி யென்றொரு க்ரந்தம் அருளிச் செய்திருப்பதாகக் காட்டப்பட்டிருக்கிறது. "ஆச்சான்பிள்ளையும்.........நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதப்படியிலும் அஷ்டாக்ஷரதீபிகையிலும் ஸ்வரூபவ்யாப்த்யபாவாதிகளை அருளிச் செய்தார்கள்" என்பது அவ்விடத்து ஸ்ரீ ஸூக்தி.

3. அதற்கு முன் பக்கத்தில் (65-ல்) "இவ்வர்த்தத்தை யாமுநாசார்யர் தத்வபூஷணத்திலும் நாயனாராச்சான்பிள்ளை தத்வஸங்க்ரஹத்திலும் விஸ்தாரமாக அருளிச் செய்தார்கள்" என்றுள்ளது. (இங்கு யாமுநாசார்யர் என்பவர் ஆளவந்தாரல்லர்; நம்பிள்ளைக்குப் பிற்பட்டவர். பெரியவாச்சான் பிள்ளை தனியனில் "யாமுநஸூநவே" என்றிருக்கிறது; அந்த யாமுநாசாரியராக இருக்கத்தகும். தத்வபூஷணம் தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருக்கிறது.)

4. அந்த அஷ்டச்லோகீ வியாக்கியானத்திலேயே (பக்கம் 205-ல்) "ஸ்ரீமஃ ப்ரியா வடகயா ஸ்வஃவோயஹாவெ ஃரவெ ஸ்வயி ஸ்வயஃவெயதயா ஸ்ஃஸ்ஜா — ஸ்ரீச: ச்ரியா கடகயா த்வதுபாயபாவே ப்ராப்யே த்வயி ஸ்வயமுபேயதயா ஸ்புரந்த்யா" என்று ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவும் அருளிச்செய்தார்" என்றுள்ளது. ஆனால் இந்த ச்லோகம் அண்ணாவின் திருப்பேரனாரான அபிராமவராசார்யர் அருளிச்செய்த க்ரந்தத்தில்தான் காணப்படுகிறது. அண்ணாவின் க்ரந்தங்களில் இல்லை.

5. பகவத்கீதையில் பதினோராவது அத்யாயத்தில் 26, 27 ச்லோகங்களின் பாஷ்யத்திற்குத் தாத்பர்ய சந்த்ரிகை அருளிச் செய்கின்ற தேசிகன்—".....யாஃவஃகாஸியெ ஙிஹ கெஜிக வஞஷ்ெயாகாநு வ௦ஜீதீ விஜிவஃ வஃவஃகஃ" என்றெழுதி அந்த ஐந்து

ச்லோகங்களையும் பூர்த்தியாக எழுதி "ஸந்த்யேதே ச்லோகாஸ்ஸந்தி ந வேதி தேவோ ஜாநாதி; வ்யாக்யாத்ருபிரக்ரஹணாத் பாடஸம்ப்ரதாயாபாவாச்ச பாஷ்யகாரேணோபேக்ஷிதா:" [இந்த ச்லோகங்கள் உண்மையாக வுண்டோ இல்லையோ, அது பகவானுக்குத் தான் தெரியவேணும். இந்த ச்லோகங்கள் முந்தின வியாக்கியான காரர்களால் கொள்ளப் படாமையாலும் பாடபரம்பரையில் வாராமையினாலும் பாஷ்யகாரரால் உபேக்ஷிக்கப் பட்டன] என்று முடித்தருளினார். அந்த அதிகப்படி ச்லோகங்கள் மூன்றாமத்யாயத்தில் முப்பத்தேழாவது ச்லோகத்திற்குமேல் இருப்பனவாக ப்ரஸ்தாவம் வந்திருக்கிறதிங்கு. இவ்விடத்திலும் நான்கு ச்லோகங்களை அதிகப்படியாய்ப் பிறருடைய பாடத்திலிருப்பன வாகக் காட்டியிருக்கிறார் தேசிகன்.

6. பகவத்கீதையில் நான்காவது அத்யாயத்தில் (8) * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே * என்கிற ச்லோகத்திற்கு ஆனந்த தீர்த்தாசார்யர் [மத்வாசார்யர்] பாஷ்யம் பண்ணுகையில் "ந ச தேநைவ பரித்ராணாதி கார்யமிதி நியம:; ததாபி லீலயைவமேவ யதேஷ்டசாரீ" என்று எழுதியுள்ளார். பகவான் அவதாரம் பண்ணியே ஸாது ஸம்ரக்ஷணம் முதலானவற்றைச் செய்தாக வேணுமென்று ஒரு நிர்ப்பந்தமுமில்லை; ஆனாலும் லீலையாலும் ஸ்வபாவத்தாலும் தோன்றினபடி செய்துவருவதாக * லோகவத்து லீலாகைவல்யம் * இத்யாதி ப்ரமாணங்களினால் ஏற்படுகிறது என்கிறார்: மூலத்திற்கும் இந்த பாஷ்யத்திற்கும் எடுத்திருக்கிற ப்ரமாணத்திற்கும் என்ன ஸம்பந்தமென்று பெரியார்களிடம் கேட்டுணரவேணும்.

7. பிள்ளை லோகாசார்யர் கத்யத்ரயத்திற்கு ஒரு வியாக்யானமருளிச்செய்திருப்பதாகத் தெரியவருகிறது. தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில் (6) "ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனாகையாவது— ஆநந்தரூபஜ்ஞாநனாயிருக்கை" என்றவிடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில்—"அநுகூல ஜ்ஞானமே ஸ்வரூபமாயிருக்க ஜ்ஞாநாநந்தங்களென்று பிரித்துச் சொல்லுகிறது இரண்டுமுண்டாகைக்காக — என்றிறே இவர்தாமிட்டருளின கத்யவ்யாக்யானத்திலே அருளிச்செய்தது" என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுகிறது. ஆனால் அந்த வியாக்யானம் இப்போது எங்குங் கிடைப்பதில்லை.

8. நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் தத்வத்ரய விஷயமாகவொரு விரிவான க்ரந்தமருளிச் செய்திருப்பதாகத் தெரிகிறது. தத்வத்ரய வியாக்யானத்தில் மணவாளமாமுனிகள் அந்த க்ரந்தத்திலிருந்து விரிவான வாக்கியங்களை அடிக்கடி உதாஹரித்தருளுகிறார். அந்த க்ரந்தமும் இப்போது கிடைப்பதில்லை.

9. தார்க்கிகர்கள் அபாவத்தை நான்காக வொப்புக்கொண்டிருக்கிறார்கள்; ப்ராகபாவம், ப்ரத்வம்ஸாபாவம், அத்யந்தாபாவம், அந்யோந்யாபாவம் என்று. ஆனால் நம்முடைய ஆசார்யர்கள் அத்யந்தாபாவமென்று வ்யவஹரிக்கவேண்டுமிடங்களில் ப்ராகபாவமென்றே வ்யவஹரிக்கக் காண்கிறோம். திருவாய்மொழி முதற்பாட்டின் ஈட்டில் * அயர்வறுமமரர்கள் * என்றவிடத்தில் "அயர்வாகிறது விஸ்ம்ருதி; அதின்றிக்கேயிருப்பர்கள்; ப்ராகபாவத்தைப் பற்றச் சொல்லுகிறது; ப்ரத்வம்ஸாபாவமுண்டிறே முக்தர்க்கு" என்றுள்ளது. இவ்விடத்தில் இரண்டு அரும்பதவுரைகளிலும் "ப்ராகபாவமென்று அத்யந்தாபாவம் சொல்லப்படுகிறது: ப்ராகபி அபாவ:—ப்ராகபாவ: என்று ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா நிர்வஹித்தருளும்படியென்று ப்ரஸாதிப்பர்" என்று விவரணம் காட்டப்பட்டிருக்கிறது.

(தொடரும்).

# AN INTRODUCTION
# TO
# ACHANPILLAI ASHTADHYAYI.

"**PARANDA RAHASYAM**" is a Rahasya-grantha (an exposition of the Manthras), well known to scholars of Sri Vaishnava Sampradaya. A controversy has, of late, grown up, as to its authorship. Some attribute it to the famous "Periavachanpillai," the commentator of the "Divya Prabandhams." Other scholars contend that it was written by his direct disciple (or probably son) Achanpillai, also called 'Nainar Achanpillai and Abhayapradarajaputra.

Sri. P. B. Annangaracharya Swami has conducted an extensive research in this field and has published a thesis called "**ACHANPILLAI ASHTADHYAYI**" in which he has upheld the latter view. This book of eight chapters runs to 106 paragraphs. A thorough study of such a controversial topic necessitates dilation upon many points connected directly or indirectly with the point in question and consequently the bulk of the volume has grown up. Scholars can appreciate and derive benefit from each and every one of these chapters and paragraphs. But some people feel that they cannot make a deep study of the book for want of sufficient time or scholarship. For their sake, the most salient points in the essay are explained in a nutshell, hereunder. To understand the whole argument and appreciate it, one has, however, to go through the original thesis itself.

Alone, among our 'Purva Acharyas' or the great Sri Vaishnava teachers of yore, Manavalamahamunigal quotes in his Rahasya Granthas, many passages from 'Paranda Rahasyam.' Other Acharyas do not seem to quote from it. Therefore, points out our Sri. P.B.A.Swami, it is necessary and sufficient to consider the views of this great teacher about the authorship of the 'Paranda Rahasyam. Now, Manavalamahamunigal makes mention of both Achanpillai, and Periavachanpillai. Others contend that Manavalamahamunigal refers, but, to only one Acharya, that is Periavachanpillai, under the two names and that the other Acharya is not at all mentioned by him. Our Sri. P. B. Annangarachrya Swami points out, in great detail, that this cannot hold good. Manavalamahamunigal had the greatest respect for Periavachanpillai and as such he would not have called him by the simple name of Achanpillai. In all the undisputed references to him, in the Rahasya Granthas, Manavalamahamunigal calls him invariably under the name of Periavachanpillai, and often more respectfully, as 'purvar' (or the elder teacher). Many passages are quoted in the Ashtadhyayi to show that this is invariably true of each and every one of the definite references to Periavachanpillai and that not

a single instance can be pointed out where the great teacher is called merely Achanpillai, by Manavalamahamunigal. Therefore, Sri. P. B. Annangaracharya Swamy concludes that the Achanpillai referred to by this great teacher ought to be different from Periavachanpillai.

The following are some of the proofs adduced by Sri P. B. Annangaracharya Swami to prove this fact beyond doubt.

In his extensive commentary on Sutra 27 of Tatvatraya, chapter 2, Manavalamahamunigal points out that the author of his original, Pillailokacharya, ought to have explained certain subtle points, which he refrained from doing for the sake of brevity of expression. He explains the points himself and comes along two rival schools of thought supported by his forerunners. It is important, in this connection, to note, points out our Sri P. B. Annangaracharya Swami, Manavalamahamunigal's wordings: "This is the theory explained by Achanpillai in his Tatvatraya Vivarana; the other one is supported by Vadikesari Alagiyamanvala Jeer in his Tatvanirupana. Pillailokacharyar has not entered into all these details because he wanted to be very concise. Periavachanpillai has also adopted this same method."

The Ashtadyayi points out that this is a very significant passage to be considered. Manavalamahamunigal says that Jeer ( Vadikesari Alagiyamanvala Jeer ) and Achanpillai have dwelt upon a certain point in detail, in their treatises, incidentally adopting two different schools of thought, whereas Pillailokacharyar and Periavachanpillai have been very brief in this connection. The import of this is clear as daylight. It shows, beyond the shadow of doubt that the Achanpillai mentioned by Manvalamahamunigal must and should be different from Periavachanpillai. Otherwise it would be absurd to declare that Achanpillai has dwelt upon a point at great length in his "Tatvatraya Vivarana," and say in the same breath that he omitted all the details for the sake of brevity. The same person cannot, in the same breath, be said to have both done and undone a thing.

As the Ashtadhyayi points out, references to Achanpillai and extracts from his works are made in numerous places by Manavalamahamunigal (vide Tatvatraya Vyakyanam, sutras 3, 35, 149 etc.). From the nature of these references, it can be concluded that the term Achanpillai cannot refer to Periavachanpillai. Incidentally it can be inferred that Periavachanpillai, too, had written a very short treatise upon Tatvatraya. This also goes to prove that "Tatvatraya Vivarana" cannot be his composition.

The Ashtadhyayi advances another argument from the Mumukshuppadi Vyakhyanam. In the commentary upon Sutra 97 of the said work, Manavalamahamunigal says, "This is evident in the works of Naduvilthiruvidhippillai Bhattar

and Achanpillai. Under Sutra 116, he writes, "Achan Pillai and Jeer have adopted this procedure." The point to be noted here is, that Achanpillai is given the second place in the first sentence and the first place in the second one. One need not wonder as to what this order can portend and say, 'when two or more people are mentioned together, some order must be followed. Words cannot be pronounced. and much less written, simultaneously. They must flow in an order. So, one of the persons must be given the first place, another the second place and so on. But one order would serve as well as another. As such, why should so much fuss be made about the order?" As the Ashtadhyayi rightly points out, when Manavalamahamunigal's writings are concerned, even the slightest factor such as the order of mentioning many things together, has a deep significance. The erudite teacher does not write anything carelessly, but weighs each and every one of his words. Therefore, there must be a meaning in the order under question. The Ashtadhyayi explains the significance very clearly. The Achanpillai in the first sentence cannot be Periavachanpillai. Periavachanpillai sat at the feet of Nambillai, right from his youth and studied all the Sastras from him and became the foremost of his disciples. Naduvilthiruvidhippillai Bhattar, as can be learnt from the Guruparampara Prabhavam, kept aloof from Nambillai, envying, his status, for the greater part of his life. It was only in his very advanced years that he was drawn up towards the feet of Nambillai, by force of the latter's supreme good nature. As such, though both these teachers were Nambillai's disciples, Manavalamahamunigal would never dream of giving the first place to this converted Bhattar and speak of ever-devoted, great Periavachanpillai in the next breath. The order ought to have been reversed; otherwise it would go to prove that Manavalamahamunigal considered Periavachanpillai as being very much inferior to Naduvilthiruvidhipillai Bhattar. But when the term Achanpillai refers to Periavachanpillai's disciple, the order holds good as it is. In the second sentence of Manavalamahamunigal, quoted above, there is no difficulty. Jeer (Vadikesari Alagiyamanavala Jeer) was Achanpillai's disciple and. consequently the Guru's name preceeds that of the disciple. This explanation appears to be a very sound one.

As already stated, references to Achanpillai are made by Manavalamahamunigal in quite a good number of places. Many passages from Achanpillai's Tatvatraya Vivarana are quoted in the Tatvatraya Vyakhyanam and Mumukshuppadi Vyakhyanam quotes many passages from Paranda Rahasyam, stating that it is Achanpillai's work. Now Sri P. B. Annangaracharyaswamy has established, as already described, that the author of Tatvatraya Vivarana cannot be Periavachanpillai, according to Manavalamahamunigal's statement, and the extracts referred to by him cannot have been taken from Periavachanpillai's very concise thesis.

Commonsense tells us that when once this is established, Achanpillai, quoted by Manavalamahamunigal as the author of the Parandarahasyam must be the same as the author of the Tatvatraya Vivarana; and not Periavachanpillai as others contend. For, Manavalamahamunigal cannot be taken to have mentioned two different persons by the same name, and at the sametime used two names for one and the same person. As already stated, both the names of Achanpillai and Periavachanpillai are mentioned in one place in the commentary on Sutra 27, Chapter 2, of Tatvatraya, and the circumstances show that two teachers are meant, there. Therefore it would be absurd to assume that the same person is sometimes called Achanpillai and sometimes Periavachanpillai, there being no rational cause to make this distinction.

Thus Sri P. B. Annangaracharya Swami has proved, in great detail, that Manavalamahamunigal's verdict is that the author of Paranda Rahasya is different from Periavachanpillai. He then quotes the opinion of some modern scholars also, in this matter.

The late Paramahamsa, Ayodhya Sriranganarayana Jeer Swami, who was the occupant of the Sriranga Narayana Jeer Mutt at Srirangam, for a long time, was a great scholar whose erudition is well known throughout our land. He has edited and published an extensive work called Manthrartha Dipika, in Devanagari Characters. On page 6, line 18 (chapter 2) of that book, we find the explanation given in that book, that by the word Achanpillai Manavalamahamunigal meant (in his vyakhyana on Mumukshuppadi Sutra 27, chapter 2, quoted above) Abhayapradarajaputra, the author of Paranda Rahasyam. No sane person with an iota of knowledge of Sri Vaishnava Sampradaya can claim that Abhayapradarajaputra is Periavachanpillai himself. He (the latter) can, at best be Abhayapradaraja, but never Abhayapradarajaputra.

This same Ayodhya Ramanuja Jeer swami has brought out an edition of Ashtadasa Rahasyam, in 1911. In a remarkable footnote on page 88 of that book, he writes, "Parandarahasyam is the work of Nainarachanpillai, as is evident from Thirumanthrartha Vyakhyanam etc. He is also called Achanpillai If it (Parandarahasyam) had, in reality, been composed by Periavachanpillai, he could have been mentioned by that very name of Periavachanpillai, here also (Tirumanthrartha vyakhyanam), as in Tatvatraya Vayakhyanam. Tradition also ascribes it to Nainarachanpillai." These words are quite significant and need no explanation. Sri P. B. Annangaracharya Swami incidentally states here, that he has made these two references to the learned Jeer, primarily to show to the public that he (P. B. A. Swami) has not hit upon a thoroughly novel idea unheard of

before (regarding the authorship of Parandarahasyam); but is giving expression to a fact that has come in successive tradition, but hidden up in obscurity in later years.

Next our author goes to examine the internal evidence available in the book in question. The following is his line of argument. Periavachanpillai's works were all completed and widely circulated before Vedanta Desika began his career as an author. The latter's Sthothrabhashya is written by setting the former's Sthothraratna Vyakhyana for its model. His "Dramido- panishat-Tatparya Ratnavali" shows that he has made a deep study of Periavachanpillai's Vyakhyanam on Nammalwar's Thiruvoymozhi, called 24,000 padi. In Chapter 25, (Prabhava Vyavasthadhikara) of his Rahasyathrayasara, Vedanta Desika has made direct reference to Periavachanpillai's Peria Thirumozhi Vyakhyanam (1- 1- 9). But Achanpillai came later. He had gone through the works of Vedanta Desika and made use of them in his own works. He also gave suitable replies to the adverse criticisms made by Vedanta Desika against other Acharyas. Now, a perusal of the Paranda Rahasyam shows that in this respect, too, the work is written in the style of Achanpillai and not that of Periavachanpillai.

In this point the Ashtadhyayi is not as elucidiating as it ought to be. It does not, for example, show how the style of Parandarahasyam goes to prove that it is later than Vedanta Desika. I asked Sri P. B. Annangaracharya Swami about this, and he explained to me many points which, he said, he purposely omitted in his book, under the apprehension that it might lead to unnecessary sectarial controversies. I will here explain one such point, which goes to point out the true author of the Parandaarhasyam. In chapter 23 (Siddhopaya Sodhanadhikara) of his Rahasyatraya sara, Sri Vedanta Desika has tried to show that Lakshmi is as much an 'Upaya' for the Prapanna, as Lord Narayana himself. He begins his deliberations with the words, "We will now clear the doubts and misunderstandings arising in the word Srimath (in the Dwaya Manthram,)" and in the course of his arguments he refers to a certain verse from Saint Nammalwar's Thiruvoymozhi (4, 5, 11). ‡ We find this particular argument refuted in the Parandarahasyam, thereby establishing that its author cannot have been Periavachanpillai.

In this connection, it is necessary to remember one thing. In all the various works of Periavachanpillai (those, of course that are definitely known to be his), we find no trace of any kind of sectarian conroversy. Perhaps such quarrels were very rare in his time. But, more than that, the calm, gentle nature of that noble

‡ These are his very words:— "இனி........ஸ்ரீமச் சப்தத்திலே சொல்லுகிற பத்நீ ஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு திங் மாத்ரத்தாலே பரிஹாரம் காட்டுகிறோம். ...........* வேரிமாருத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே * என்று நம்மாழ்வார் அருளிச் செய்தார்."

teacher did not permit him to enter into wordy warfare with members of other sects, belonging to his own Sri Vaishnava Sampradaya. During Manavalamahamunigal's time, such sectarian controversies had reached their peak. But again, this noble, highly spiritual, Sattvik Acharya could never enter into such a battlefield. He would, on the other hand, explain the doctrines of his own sect so squarely and in such a calm, charming manner, that adverse criticisms would disappear by themselves. Periavachanpillai, too, was of the same nature.

But the story of Achanpillai is different. He did enter the field of controversy. He attacked rival theories and answered the criticisms of rivals. This is clear from his works, such as Tatva Sangraha, Charama Rahasyatraya, Chatus sloki Vyakhya, etc. In fact, Achanpillai and Vedanta Desika were contemporaries. Each criticised the other and counter criticisms, too 'sprang up. Thus we find the works of these two graet scholars abound with such criticisms and counter-criticisms. Now Paranda Rahasya is also written in such a style; it resorts to such criticisms now and then. As such, it can never have come from the pen of Periavachanpillai.

Our Puthur Advocate Swami mentions in his journal that he is writing a book, which refutes all these arguments of the Ashtadhyayi and establishes the identity of the author of the Paranda Rahasyam with Periavachanpillai and that the book will be published in the next month's issue. He has also, very kindly, informed me of this fact through a post card and has asked me to send him the subscriber's list of our journal "Sri Ramanujan." I have sent him a reply along with the list. I heartily welcome this enterprise of our Advocate Swami. If his book really proves, by means of irrefutable arguments, that Paranda Rahasyam was in fact composed by Periavachanpillai himself, our Sabha is prepared to get it printed and published at our cost, in our journal. Or, if it so pleases him, our Advocate Swami can kindly send us 200 printed copies of the book, with proper headline and we will, with pleasure, publish them as a supplement to our journal. The one thing that is of primary importance in this respect is that no room should be given to unnecessary passions and mean criticisms. Let everything be done in a gentlemanly manner.

Some of the numerous testimonials received in appreciation of the Ashtadhyayi from Matha Adhipathis, Pandits, Vidwans and other learned people have been appended to this.

In conclusion, I pray God that this controversy might end soon.

Madras
27 - 4 - 49

**G. MUSALAPPAREDDIAR** B. A., B. L.,
Advocate
Secretary, Sathgrantha Prakasana Sabha

# உபயராமாயண கதாஸாரம்—கம்பர்பகுதி.

## விச்வாமித்ர சரித்ர வர்ணன கெட்டம் (4)

### கம்பராமாயண பாலகாண்டத்தில் மிதிலைக் காட்சிப் படல மொன்றிற்கூறிய கதையின் ஸாரம் வருமாறு;—

#### சதாநந்த முனிவன் விச்வாமித்திர சரித்திரங் கூறத் தொடங்குதல்.

*மிதிலாபுரியின் பல்வகை வளங்களையுங் கண்ணாரக்கண்டுகொண்டே விச்வாமித்திர முனிவரைப் பின்சென்றனர் ராமலக்ஷ்மணர்கள். ஜனகராஜனது அரண்மனை மதிலைச் சூழ்ந்துள்ள அகழியைக்கண்டபின் அரண்மனையிலுள்ள கன்னிமாடத்தைக் கண்டனர். அங்கு அழகிற்சிறந்த சீதாபிராட்டி நின்றிருந்தனள். அப்போது, இராமபிரான்கண் அவள்மீதும் அவளுடைய கண் இராமபிரான் மீதும் விழ, அதனால் இருவர் மனவுணர்ச்சியும் ஒற்றுமைப்பட்டு ஒருதன்மைத்தான காதலைக்கொண்டது. இராமன் அவ்விடம்விட்டு அப்பால் சென்றபின் சீதாபிராட்டியின் காமநோய் மிக மிக வளர்ந்து தோழிமார்கள் பல வகையுபசாரங்களும் செய்ய நேர்ந்தது. அது அப்படியிருக்க, விசுவாமித்திர முனிவர் முதலிய மூவரும் ஜனக மன்னவனால் எதிர்கொள்ளப்பட்டு அவன் காட்டியதொரு மாளிகையில் தங்கியிருக்கையில், அகலிகையின் புதல்வனாகிய சதாநந்த முனிவன் அங்குவந்து சேர்ந்து, அப்போது தன்னைவந்து வணங்கிய ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களை வாழ்த்திவிட்டு விச்வாமித்திர முனிவரருகிற் சார்ந்து தன்னுடைய பெருமகிழ்ச்சியைக் கூறிநிற்க, விச்வாமித்திரர், இராமன் தாடகை முதலானாரை வதைத்துத் தமது வேள்வியை முற்றுவித்த வைபவங்களைச் சதானந்தனுக்குக் கூறினர். அப்போது சதானந்தன் விச்வாமித்திரரது சரிதையைக் கூறக்கருதி இராமனது முகத்தை நோக்கினன்.*

#### விச்வாமித்திரர் வசிட்டருடைய காமதேனுவை விரும்பிப் பங்கமடைந்து தவம்புரிந்தமை கூறல்.

*இராமா! இம்முனிவர் முன்பு அரசனாக இருந்தவர். அப்போது ஒருநாள் வேட்டையாடுதற் பொருட்டுக் கானகஞ் சென்று வசிட்டமாமுனிவரது ஆச்ரமத்தைச் சார்ந்தனர். அப்போது இவர்க்கு விருந்திடக்கருதிய அம்மாமுனிவரது ஆணையால் காமதேனு அமுதமன்ன உணவுகளை மிகமிகச் சுரந்தது. அங்ஙனம் சுரந்துதந்த அறுசுவையுணவையும் புஷ்பசந்தனங்களையும் இவர் தமது சேனையோடும் பெற்றுக்கொண்டு சிரமமெல்லாம் தீரப்பெற்று அம்முனிவரை நோக்கி 'இக்காமதேனுவை எனக்குத் தந்திடவேணும்; இப்படிப்பட்ட சிறந்த பொருள்கள் அரசர்களிடத்தில்தானே யிருக்கத்தக்கன; ஆகவே இதனை எனக்குத் தந்திடவேண்டும்' என்று கூற, அதற்கு வசிட்டர் 'முனிவர்க்கு அரசர் கொடுப்பதுண்டேயல்லது அரசர்க்கு முனிவர் கொடுப்பதில்லையே' என்று கூறி 'இப்பசு வருவதானால் நீயே யழைத்துக்கொண்டு போகலாம்' என்றுங் கூறினர்.*

*நீ சொன்னபடியே செய்வேனென்று விசுவாமித்திரர் அந்தக் காமதேனுவைக் கட்டியிழுத்துக்கொண்டு போகத்தொடங்க, அது அந்தப் பிணியையறுத்துவிட்டு வசிட்டமுனிவரையணுகி 'நீர் என்னை இந்த அரசனுக்குக் கொடுத்தீரோ?' என்று வினவ. 'நான் கொடுக்கவில்லை, வேந்தனே உன்னைக் கொண்டு அகல்வுற்றான்' என்று மறுமொழி கூற, கௌசிகனது செருக்குக்கண்டு சினந்த அந்தப்பசு 'நானே இவனது சேனையையெல்லாம் முடித்து விடுகிறேன்' என்று சொல்லித் தன்னுடர்புமயிரைச் சிலிர்த்தது. அங்ஙனம்*

சிலிர்த்த மயிரிலிருந்து ப்பரர்களும் வேடர்களும் சீனர்களும் சோனகர்களும் முதலான பல மிலேச்ச கணங்கள் ஆயுதங்களைக் கையிற்கொண்டு தோன்றி விசுவாமித்திரரது சேனை களையெல்லாம் வெட்டித் தள்ளினவளவிலே இவரது குமாரர்கள்_ சினங்கொண்டு ஒருங்கே திரண்டு 'இது இக்காமதேனுவினது பலமன்று, வசிட்ட முனிவனது மாயையேயாம்' என்று கூறி அவன் தலையை இதோ அறுத்திடுவோ'மென்று வீரவாதஞ்செய்து சினந்தெழுந்து எதிர்த்து நெருங்க, அப்பொழுது வசிட்டர் விழித்தமாத்திரத்திலே விச்வாமித்ரபுத்ரர் யாவரும் மாண்டனர். இங்ஙனம் தமது புத்திரர் நூற்றுவரும் இறந்ததைக்கண்டு வருந்தி உக்கிரமாக வெழுந்து தமது தேரை வசிட்டரெதிரில் அருகிற் செலுத்தி வில்லையெடுத்து வளைத்து முனிவர்மீது அம்பெய்யத்தொடங்க முனிவர் தம் கையிலுள்ள பிரம தண்டத்தை நோக்கி நியமிக்க, கௌசிகன் பிரயோகித்த படைகளையெல்லாம் அது விழுங்கிவிடவே, கௌசிகன் அப்போது சிவபிரானை வழிபட்டு வணங்கித்துதித்தவளவிலே அப்பரமன் காட்சி தந்து வலிமைமிக்க படைக்கலமொன்றைக் கொடுத்துப்போக, அந்த ரௌத்ராஸ்த்ரத்தை வசிட்டர்மீது விட்டனர். அம்முனிவர் அப்படையையும் பயனற்றதாகச் செய்திட, பிறகு அரசராற்றலினும் முனிவராற்றல் மிகச் சிறப்புடையதென்பதைத் தெளிவாக அறிந்து கௌசிகன் அந்த ஆற்றலைத் தான் பெறக்கருதித் தவஞ்செய்யக் கீழ்த்திசைக்குப் போயினன். போய், தேவேந்திரனும் துணுக்குறுமாறு கடுந்தவம் புரிய, அத்தவத்தைக் கெடுக்க இந்திரன் திலோத்தமையை ஏவியனுப்பினன். அவளைக் கண்டதும் கௌசிகன் காமவசப்பட்டு அவளுடன் சிற்றின்பம் நுகர்ந்து பிறகு ஒருபாற்சினமும் ஒருபால் பச்சாத்தாபமுங்கொண்டு அத்திசையினின்று நீங்கித் தென்திசையில் தவம்புரியுமாறு சென்றனன்.

### விசுவாமித்திரர் தவம் புரிகையில் திரிசங்கு மன்னவன் வந்தடைந்த கதை கூறுதல்

இராமா! அப்போது அங்கு நடந்ததொரு கதையைக்கேளாய்; அயோத்திமாநகரில் வாழ்ந்த திரிசங்கு வென்னும் மன்னவன் தனது குலகுருவாகிய வசிட்டனை வரவழைத்து 'இந்தப்பூதவுடம்புடனே நான் ஸ்வர்க்கஞ் செல்லுமாறு அருள்புரிக' என்று வேண்ட, அது என்னலாகாதென்று அவர் கூற, திரிசங்கு வேறு புரோகிதனைநாடி யாகம்புரிவேனென்று சொல்ல, 'இப்படி ஆசார்யாபசாரத்தை நினைத்த குற்றத்திற்காக நீ புலையனாய் விடுவாயாக' என்று சபித்தனர். உடனே தனது மேனியொளி முகப்பொலிவு யாவும் நீங்கித் திரிசங்கு சண்டாளவடிவத்தையடைந்தனன். பூண்ட அணிகலங்கள் இரும்பினாலியன்றனவாகவும் உடுத்த உடை தோலாகவும் மாற, உடல் கருகித்தோன்ற, முன்னையவடிவம் நீங்கிச் சண்டாள வடிவத்துடனே அயோத்தி சென்று சேர்ந்த திரிசங்குவை நகரத்தவர் சீசீயென் றிகழ்ந்ததனால் நகரத்தைவிட்டுக் காடு சேர்ந்து கௌசிகனையணுகி வணங்கி, நடந்த செய்திகளையெல்லாம் சொல்லி நிற்க, இவ்வுடலோடு சுவர்க்கஞ் சேருமாறு நான் வேட்பிப்பேனென்று உறுதிகூறிய கௌசிகன் வேள்விக்காக முனிவர்களை வரவழைக்க, அப்போது வசிட்டமுனிவனது குமாரர்கள் 'க்ஷத்திரியஜாதியிற் பிறந்தவொருவன் ஒரு சண்டாளனுக்காக வேள்வி புரிகிறானம்' என்று இகழ்வாகக் கூறித் தாங்கள் வாராதிருக்க, அவர்களைச் சபித்துவிட்டுக் கௌசிகன் திடமான வுறுதியுடன் வேள்வியை முடிக்கத் தொடங்கி, ஆகுதியைப் பெற வருகவென்று மந்திரங்களைச் சொல்லித் தேவர்களை யழைக்கையில், இது என்ன விபரீதச் செய்கை யென்று வெறுத்து நிந்தித்துத் தேவர்கள் வாராதிருக்க, கௌசிகன் பெருஞ் சினங்கொண்டு ஓமஞ் செய்யும் அகப்பையை உயர வெடுத்து 'யாகமிருக்கட்டும், எனது தவவலிமையினால் திரிசங்கு மன்னவன் இச் சரீரத்துடனே சுவர்க்கஞ் செல்லுக' என்ன: முனிவர் யாவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் திரிசங்கு சுவர்க்கஞ் சேர்ந்தனன். அப்போது இந்திரன் தேவர்களோடு கூடி 'குருசாபத்தினால் புலையனாகிய நீ இங்கு

இருக்கத் தக்கவனல்லே; தலைகீழாக விழுந்திடுவாய்' என்ன, திரிசங்கு கதறிக்கொண்டே விழ, அதுகண்ட கௌசிகன் 'அங்குத்தானே' நில் என்று சொல்லித்தவமகிமையினால் அவனை வானத்திலே தான் கண்டவிடத்தில்தானே நிறுத்தினன். அதுவுமல்லாமல் 'எனது வார்த்தையை மதிக்காமல் என்னையும் திரிசங்குவையும் அவமதித்த இந்திரன் முதலிய தேவர்களது பெரிய பதவி முதலாக மற்றை விண்ணுலக முழுவதையும் வேறு படைப்பேன், சந்திரன் ஸூர்யன் முதலிய கிரகங்களையும் வேறுபடைப்பேன்; ஸ்தாவர ஜங்கமங்களான எல்லாப் பொருள்களையும் வேறுபடைப்பேன்' என்று சொல்லிப் பிரதி ஸ்ருஷ்டி செய்யத் தொடங்கினவளவில், பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்களும் முனிவர்களும் ஒருங்கு கூடிக் கௌசிகனிடம் வந்து ராஜரிஷியே! தேவர்கள் உம்மை அவமதிப்புச் செய்ததைப் பொறுத்தருளவேணும்; சரணமடைந்தவனைக் கைவிடாது காப்பாற்றியருளுகிற உமது பெருமை மிக நன்றாயிருக்கின்றது; அந்தத் திரிசங்குராஜன் அவ்விடத்திலேயே நக்ஷத்திரங்களின் தொகுதியினிடையே பொருந்தியிருந்து நெடுநாள் விளங்கக்கடவன்' என்று சொல்லிச் சாந்தப்படுத்திச் சென்றனர்.

## அம்பரீஷ மன்னவனால் நரமேதத்திற்குக் கொண்டுவரப்பட்ட சுனச்சேபனை விசுவாமித்திரர் மந்த்ரோபதேசஞ் செய்து ரக்ஷித்தமை கூறுதல்.

பிறகு கௌசிகன் அங்குநின்றும் பெயர்ந்து மேற்றிசை சென்று கோரமாதவம் புரியத்தொடங்கினன். அக்காலத்தில் அயோத்தி மன்னனாகிய அம்பரீஷனென்னுமோரரசன் யாகஞ்செய்துவருகையில் யாகபசு காணப்படாமற்போய் அதற்கீடாக ஒரு மனிதனைக்கொன்று ஓமஞ்செய்து வேள்வியை நிறைவேற்ற வேண்டிவந்ததனால் அந்த நரமேதத்திற்காக ஒரு சிறுவனை விலைக்கு வாங்கும் பொருட்டு மிகுந்த பொன்னைத் தேர்மேல் நிறைத்துவைத்துக் கொண்டு காடுகள் தோறும் தேடிப்போய், ரிசீகனென்னும் முனிவன் வசிக்கின்ற சோலையையடைந்து தான் வந்த செய்தியைச் சொல்லி அவனது பிள்ளையை விலைக்குக் கேட்டவளவில் 'மூத்தகுமாரன் எனக்கே உரியவன்' என்று தந்தை சொன்னான்; 'இளையவன் எனக்கே உரியவன்' என்று தாய் சொன்னாள்; இதனால், நடுக்குமாரனாகிய சுனச்சேபனென்பவன் தாய்தந்தையர் தன்னை விலைப்படுத்தக் கருதியிருந்ததைநோக்கிச் சிரித்து அம்பரீஷமன்னவனை நோக்கி 'என்னை எடுத்துவளர்த்த தந்தையாகிய ரிசீகனுக்கு வேண்டிய பெருஞ்செல்வத்தை எனக்கு விலையாகக்கொடுத்து என்னைக் கொண்டுபோ' என்று சொல்லித் தந்தையை வணங்கி அரசனது தேரின்மேலேறிக்கொண்டு அவனுடனே செல்லுகையில் நடுப்பகல்வேளையாயிற்று. அப்பொழுது அம்பரீடன் விசுவாமித்திரன் தவஞ்செய்துகொண்டிருந்தவிடத்தருகே இறங்கி உச்சிக்கடனைச் செய்யாநிற்க, சுநச்சேபன் தானும் இறங்கி வைதிக நியமத்தைச் செய்யும்பொருட்டுச் செல்லுகையில் அவ்விடத்தே தனது மாதுலரான விசுவாமித்திரரைக்கண்டு மிகவருத்தத்துடனே திருவடிதொழுது தன் குறையைத் தெரிவிக்க மாதுலர் மருமகனுக்கு அபயமளித்துத் தன் மக்களில் ஒருவனை அவனுக்குப் பதிலாகச் செல்லுமாறு நியமிக்க, அதற்கு ஒரு குமாரனும் உடன்படாததுகண்டு அவர்களைச் சபித்துவிட்டு, பிறகு இரண்டு மந்திரங்களைச் சுனச்சேபனுக்கு உபதேசித்தருளினர் (விசுவாமித்திரர்). உபதேசம்பெற்று விடைபெற்றுச்சென்றவவன் யாகத்தினிடையே அந்த மந்திரங்களைத் தியானிக்க, தன்னுடைய உயிர்க்கு அபாயமொன்றுமின்றியே வேள்வி நிறைவேறக்கண்டனன்.

அது அங்ஙனமாக, விச்வாமித்திர முனிவர் அவ்விடத்தை விட்டுநீங்கி வடதிசை நோக்கிச்சென்று அங்கு மிகவும் உக்கிரமான தவம்புரியத்தொடங்கினர். அந்தத் தவங்கன

லினால் புஷ்கவிம்மி உலகமே மாறுபட்டு மிகவும் அஞ்ச, தேவர்கள் யாவரும் விச்வாமித்திர ரிடத்துவந்து 'நீர் பிரமவிருடியாவீர்' என்று அநுக்ரஹஞ்செய்துவிட்டுத் தம்மிடஞ்சென்று சேர்ந்தார்கள்.

### ஜனகவிச்வாமித்ர ஸமாகமம்.

இங்ஙனம் கௌசிகன் சரிதையைக் கூறி முடித்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்களை வாழ்த்தி விட்டுப்போயினர் சதானந்தமுனிவர். விச்வாமித்திரரும் ராமலக்ஷ்மணர்களுடனே சென்று பள்ளியறை யெய்தினர். இராமபிரான் அவ்விராப்பொழுதில் சந்திரனது வெண்ணிலா விளங்குஞ் சமயத்திலே தான் தனிமையாய்ப் படுக்கவிருந்தபொழுது ஸீதாபிராட்டியை நினைத்து நினைத்து உருவெளிப்பாட்டினால் மிகவும் நைந்து சோர்ந்தனன். இங்ஙனம் இராப்பொழுது கழிந்தபின் இராமன் திருப்பள்ளியுணர்ந்து முனிவனுடனும் தம்பியுடனும் சனகனது வேள்விச்சாலையைச்சார்ந்து ஜனகசக்ரவர்த்தியருகே வீற்றிருந்தனன். இக்குமாரர்கள் யாவரென்று ஜகமன்னவன் கேட்க, 'இவர்கள் தசரதசக்ரவர்த்தியின் திருக்குமாரர்கள்; உனது வேள்வியைக் காணும்பொருட்டு வந்திருக்கின்றார்கள்; உன்னிடமுள்ள சிவதனுசின் வலிமையையும் பார்ப்பர்கள்' என்று விச்வாமித்திரர் கூறி அவர்களது மகிமையையும் சொல்லலுற்றார்.

**கம்பராமாயண ஸாரத்தில் விச்வாமித்ரசரித்ர வர்ணன கட்டம் 4 முற்றிற்று.**

## வான்மீகி ராமாயணத்தில் ஸீதா விவாஹ கட்டம் (5)

[அறுபத்தாறுவது ஸர்க்கம்முதல் எழுபத்து மூன்றுவது ஸர்க்கம் வரையிலுள்ள கதைப்பகுதி.]

### ஜனகமன்னவன் தன்னிடமுள்ள வில்லின் வரலாற்றைக் கூறித் தனது பிரதிஜ்ஞையையும் தெரிவித்தல்.

மறுநாட் காலையில் ஜனகமன்னவன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு தாசரதிகளோடுகூட விசுவாமித்திரரை ஸபைக்கு வரவழைத்து உரிய பூசைகளைச்செய்து 'அடியேனுக்கு ஏதேனும் கட்டளையிடவேண்டும்' என்று கேட்டுக் கொள்ளுகையில், விசுவாமித்திரர் "மன்னவர் மணியே! உன்னிடமிருக்கின்ற மிக்க பெரும்புகழ்பெற்ற வில்லை இந்தத் தாசரதிகள் காணவிரும்புகின்றனர்; அதனை இவர்கட்குக் காட்டவேணும்" என்றனர். அது கேட்ட ஜனகமன்னவன் அந்த வில் தன்னிடத்தில் வந்து சேர்ந்த வரலாற்றை எடுத்துரைக்கத் தொடங்கினன்;—எங்கள் குலத்தில் நிமியென்பவருக்கு ஆறுவது புருடர் தேவராதர் என்பவர் சிவபிரானிடமிருந்த இவ் வில்லை ஏற்றுக்கொண்டார்; அது எப்படியென்னில்—முற்காலத்தில் சிவபிரான் தக்ஷயாகத்தில் தேவர்களை நலியும்போது இவ் வில்லை அவலீலையாக நாணேற்றிக்கொண்டு சினந்து தேவர்களை நோக்கி, ' இவ் வேள்வியில் எனக்குரிய பகுதியை நீங்கள் கொடாததனால் உங்கள் தலைகளை இவ்வில்லினால் அறுத்துத் தள்ளிவிடுகிறேன் ' என்று கூற, அப்போது தேவர்கள் அஞ்சி நடுங்கி வணங்கி வேண்டிக்கொள்ள, சிவபெருமான் திருவுள்ளமிரங்கி உவந்து அந்தவில்லைத் தேவர்கட்கு அளித்திட, அப்போது எமது குலத்தில் பெரியவராய் விளங்கின தேவராதரிடத்தில் அவ் வில் கொடுத்துவைக்கப்பட்டது; அதுவே இந்த வில். அன்றியும், நான் யாகஞ்செய்வதற்காக நிலத்தை உழும்போது உழு

படைச் சாலிலிருந்து தோன்றிய பெண்மணி சீதை யென்னும் பெயருடனே விளங்கி வருகின்றாள். என்னுடைய பெண்ணாக வளர்க்கப்பட்டுவரும் இவள், மேற்கூறிய வில்லை நாணேற்றி வளைக்கும் வல்லமை யுடையவற்கே விவாஹம் செய்து கொடுக்கத் தக்கவளாக ஸங்கல்பிக்கப்பட்டிருக்கிறாள். இதனை யறிந்த பலபல அரசர்களும் இங்கு வந்து இவ் வில்லின் வலிமையைப் பரீக்ஷித்துப் பார்த்துக் கையொழிந்து போய்விட்டார்கள். இவ் வில்லைத் தூக்கிப்பார்க்கவும் முடியாமற் போய் விட்டனர். அதனால் சீதையை ஒருவர்க்கும் விவாஹம் செய்து கொடுக்க அவகாசமேற்படாமல் போயிற்று. அதனால் மிக்க சினங் கொண்ட வேந்தர்கள் என்னோடு போர்புரிவதற்காக இந் நகரைச் சூழ்ந்துகொண்டார்கள். இந்த வில்லை வளைக்கவேண்டுமென்று நான் சுல்கம் வைத்திருந்ததை அவ்வரசர்கள் தங்களுக்குப் பெருத்த அவமானமாக எண்ணி அதனால் யுத்தஞ் செய்ய முன்வந்தார்கள்' முனிவரே! அங்ஙனம் ஓராண்டு போர் நடந்ததனால் எனது படைகள் பெரும்பாலும் நாச மடைந்தன. பிறகு நான் தவம் புரிந்து தேவகணங்களை மகிழ்வித்து அத்தேவர்களின் அருளினால் சதுரங்க சேனைகளைப் பெற்றேன். பிறகு அம்மன்னவர்களையெல்லாம் பங்க மடைந்து தொலையும்படி செய்திட்டேன். அத்தகைய மேன்மை வாய்ந்த இப்பெருவில்லைத் தாசரதிகளுக்குங் காட்டுகிறேன். இராமபிரான் இவ்வில்லை நாணேற்றி வளைப்பானாகில் சீதையை அக் குமாரனுக்கு மணம் புரிவிப்பேன்—என்று ஜனக மன்னவன் சொல்லி முடித்தனன்.

## இராமன் வில்லை முறித்தலும் அயோத்தியிலிருந்து தசரத மன்னவனை வரவழைக்க முயலுதலும்.

இங்ஙனம் ஜனக மன்னவன் கூறியதைக் கேட்ட விசுவாமித்திரர் அந்த வில்லை இராமனுக்குக் காட்டுக வென்றார். ஜனகனும் தனது வேலைக்காரர்களை யழைத்து, அவ் வில்லை அங்குக்கொணர்ந்து சேர்க்குமாறு கட்டளையிட்டனன். அவர்கள் அவ்வில் இருக்கும் பெட்டியை எட்டுச் சக்கர வண்டியிலேற்றி ஐயாயிரம் வீரர்கள் மிகுந்த சிரமத்துடன் இழுத்துக்கொண்டு வருமாறு செய்தனர். அங்ஙனம் அதுவந்து சேர்ந்த பின்பு விசுவாமித்திர முனிவனை நோக்கி ஜனகமன்னவன் கைகூப்பிக்கொண்டு "முனிவரே! இப் பெருவில்லானது மிகவும் சிறப்புப் பெற்றது; தேவர் அசுரர் அரக்கர் யக்ஷர் கந்தருவர் முதலான அனைவரும் ஒன்றுகூடினாலும் இவ்வில்லை நாணேற்றகில்லார்; அப்படியிருக்க, மனிதர்களில் இதற்கு வல்லமையுள்ளார் யாவர்? இத்தகைய பெருவில் இதோ கொண்டு வரப்பட்டுளது; இதனை இவ்வரச குமாரர்கள் பார்க்கட்டும்" என்று கூற, விசுவாமித்திரர் இராமனை யழைத்து, குழந்தாய்! இவ்வில்லைப் பார் என்றார். அதுகேட்டு இராமன் ஒரு பெட்டியிலிருந்த அந்த வில்லை உற்று நோக்கி 'ஸ்வாமின்! இச்சிறந்த வில்லை எனது கையினால் தொட்டுப் பார்க்கிறேன்; பிறகு தூக்கிப்பார்க்கவும் முயற்சி செய்கிறேன்' என்று கூறி, பல்லாயிரவர் பார்த்துக்கொண்டிருக்கையில் அவலீலையாகவே அவ்வில்லை நடுவில் பிடித்தெடுத்து நிறுத்தி, உடனே நாணேற்றி யிழுக்கையில் அவ்வில் இடையில் இற்று முறிந்தது. அப்போதுண்டான பேரொலி வருணிக்க முடியாத தாயிருந்தது. அவ்வொலி செவியில் விழப்பெற்ற பலரும் மூர்ச்சித்து நிலத்தில் விழுந்து அரிதில் தெளிந்தனர். அப்போது ஜனகமன்னவர் கைகூப்பிக்கொண்டு விசுவாமித்திரரை நோக்கி "ஸ்வாமின்! இராமனுடைய வலிமையை நான் கண்டுகொண்டேன்; மிக ஆச்சரியமாக வுள்ளது; இஃது இங்ஙனே நடைபெறுமென்று நான் கனவிலும் கருதவில்லை. இனி எனது மகளான ஸீதை இராமனைக் கணவனாகப்பெற்று எனது குலத்திற்குப் பெரும் புகழ் விளைப் பாள்; இவளுடைய விவாஹத்திற்காக நான் கொண்டிருந்த சபதமும் நிறைவேறிற்று.

இனி விவாஹம் நடைபெற வேண்டியதே. அயோத்தியில் வாழும் தசரத மன்னவர்க்கு இச்செய்தியை அறிவித்து விரைவில் அவரை இங்கு வரவழைக்கவேண்டும்'' என்றுரைக்க, முனிவரும் அங்ஙனமே யாகுகவென்று இசைந்து நிற்க, மன்னவன் மந்திரிகளிடம் விவாஹ முகூர்த்தப்பத்திரிகை கொடுத்துத் தசரதரை அழைத்து வருமாறு ஏவினன்.

### ஜனகமன்னவனது தூதர்களால் செய்தியறிந்த தசரதர் வஸிஷ்டர்முதலானோரோடு ஆலோசித்து மிதிலைக்குப் புறப்பட நிச்சயித்தமை கூறல்.

ஜனக மன்னவனது கட்டளையின்படியே அயோத்திநகர்க்குப் புறப்பட்டவர்கள் நான்காவது நாள் அங்குச்சென்று சேர்ந்தார்கள். தசரத மன்னவனையும் முறையில் காணப்பெற்றார்கள். பிறகு கைகூப்பிக்கொண்டு ''மன்னவர்மணியே! மிதிலை நகர்க்கு அரசரான ஜனக சக்ரவர்த்தி உமது யோகக்ஷேமங்களை வினவுகின்றார்; அன்றியும் தமது புதல்வியாகிய ஸீதைக்கு விவாஹசுல்கமாக வைக்கப்பட்டிருந்த வில் நெடுநாளாக ஒருவராலும் எடுக்கவும் முடியாதபடி யிருந்து, இப்போது உமது திருக்குமாரரான இராமபிரானால் எடுத்து வளைக்கப்பட்டு முறிபட்டதனால் ஏற்கெனவேயுள்ள பிரதிஜ்ஞையின்படி ஸீதையை இராமனுக்குக்கொடுத்துத் திருக்கலியாணம் நடத்த நிச்சயித்திருப்பதை நீங்கள் இசைந்து ஸபரிவாரராய் மிதிலாபுரிக்கு விஜயஞ்செய்து சுபகாரியத்தைச் சடக்கென நிறைவேற்ற வேணுமென்றும் வேண்டிக்கொள்ளுகிறார்'' என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அது கேட்டதும் மிக்க மகிழ்வெய்திய தசரத மன்னவன் வஸிஷ்டர் வாமதேவர் முதலிய முனிவர்களையும் மந்திரிகளையும் அழைப்பித்து அந்த ஆனந்தச் செய்தியை அறிவித்து, எல்லாருமாக நாளைக்குப் புறப்பட்டு மிதிலைக்குச் செல்லவேணுமென்று உறுதியிட்டனர்.

### தசரதர் மிதிலாபுரி வந்துசேர்ந்து ஜனகரோடு ஸம்பாஷித்தமை கூறல்.

மறுநாட் காலையில் தசரதமன்னவன் கலியாணப்புறப்பாட்டிற்கு உரிய கட்டளைகளை வெகு அழகாகச்செய்தனன். சேனைகளும் பல்லக்குகளும் தேர்களும் காலாட்களும் புரோஹிதர்களும் முன்னே புறப்பட்டுப் போகவேண்டுமென்று துரிதப்படுத்தி அங்ஙனமே அனைவரையும் பலபல அலங்காரங்களுடனே புறப்படச்செய்து தானும் புறப்பட்டு நாலு நாள் கடந்து ஐந்தாநாளில் யாவரும் மிதிலாபுரி சென்று சேர்ந்தனர். இவர்களது வருகையை யறிந்து மகிழ்ந்த ஜனக மன்னவன் முறைப்படி எதிர்கொண்டனன். மிக்க பெரும் புகழ்படைத்த தசரதசக்ரவர்த்தியும் வஸிஷ்டர் முதலிய மாமுனிவர்களும் தன் இருப்பிடம் நோக்கி வந்தமை பற்றித் தனக்குண்டான அளவுகடந்த ஆனந்தத்தை அடிக்கடி விண்ணப்பஞ்செய்துகொண்டனன். தனக்கும் தனது குலத்திற்கும் பெருமேன்மையுண்டான மஹாபாக்யத்தை வாயாரச் சொல்லிக்கொண்டனன். ''இப்போது நடைபெற்று வருகின்ற எனது வேள்வியின் முடிவில் விவாஹசுப முகூர்த்தத்தை நிறைவேற்றிவைக்க வேணும்'' என்றும் பிரார்த்தித்துக்கொண்டனன். அதற்குத் தசரதர் 'கன்னிகையைக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கின்ற நீர் எந்த சுபமுகூர்த்தத்தில் கொடுக்கின்றீரோ அந்த சுபமுகூர்த்தத்தில் நாங்கள் பெற்றுக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம்; இனி எங்களால் என்ன தடை? எதையும் உமது கட்டளையின்படியே நடத்தக் காத்திருக்கின்றோம்' என்றனர். இப்படி ஒருவர்க்கொருவர் அழகாக வார்த்தையாடிக்கொண்டு அவ்விரவைப் பெருமகிழ்ச்சியோடு கழித்தனர்.

### வஸிஷ்ட முனிவர் இக்ஷ்வாகு ஸந்தான பரம்பரையைப் பகர்தல்.

மறுநாட் காலையில் ஜனகமன்னவன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு புரோஹிதரான சதானந்தரை விளித்து 'ஸ்வாமின்! என்னுடைய இளைய தம்பி குசத்வஜனென்பவன்

இக்ஷுமதி யென்கிற நதியின் கரையில் ஸாங்காச்யை யென்னும் நகரில் வாழ்கின்றனல்லவா? அவனை நான் காண விரும்புகின்றேன்; அவனும் இங்கு வந்து ஸீதா விவாஹக் காட்சியைக் கண்டுகளிக்கவேணும்' என்று பேசிக்கொண்டிருக்கையில் அங்கு வேலைக்காரர் சிலர் வந்துசேர, அவர்களுக்குக் கட்டளையிட்டனுப்ப, அவர்கள் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு புறப்பட்டுப்போயினர். ஸாங்காச்யா நகரத்தில் அவர்கள் குசத்வஜரைக் கண்டு செய்திசொல்ல, அவரும் கேட்டுக்களித்து உடனே புறப்பட்டு மிதிலைமாநகர் வந்து சேர்ந்து, தமையனுரான ஜனகரையும் சதானந்தரையும் கண்டு வணங்கி ஆஸனத்தில் அமர்ந்தனர். பிறகு தசரதமன்னவரும் புரோஹிதர் முதலானோரோடு கூட அவ்விடம் வரவழைக்கப்பட்டு வந்து சேர்ந்து, தமது வம்ச பரம்பரையைத் தம் குலகுருவான வஸிஷ்டர் எடுத்துரைப்பர் என்று கூறினவளவிலே வஸிஷ்டமா முனிவர் விசுவாமித்திரருடைய அனுமதியையும் பெற்றுக்கொண்டு வம்சாவளியை எடுத்துரைக்கத் தொடங்கினர்.

பிரமனிடத்தில் நின்று மரீசி தோன்றினர். மரீசியின் புதல்வர்-காசியபர். அவருடைய புதல்வர் விவஸ்வான். விவஸ்வானது புத்திரர்—மனுப்ரஜாபதி. மனுப்ரஜாபதியின் குமாரர்—இக்ஷ்வாகு.

இந்த இக்ஷ்வாகுவே அயோத்தியை முந்துற அரசாண்டவர்.

இக்ஷ்வாகுவின் புத்திரர்—குக்ஷி. குக்ஷியின் புதல்வர்—விகுக்ஷி.

விகுக்ஷியின் புத்திரர்—பாணர்: பாணருடைய புத்திரர்—அநரண்யர்.

அநரண்யருடைய புத்திரர்—ப்ருது. ப்ருதுவின் புத்திரர்—திரிசங்கு.

திரிசங்குவின் மகன்—துந்துமாரன். துந்துமாரனுடைய மகன்—மாந்தாதா.

மாந்தாதாவின் மகன்—ஸுஸந்தி. ஸுஸந்தியின் மக்கள்—துருவஸந்தி, ப்ரஸேனஜித்.

துருவஸந்தியின் புத்திரர்—பரதர். பரதருடைய புதல்வர்—அஸிதர்.

அந்த அஸிதர்க்குப் பலர் பகைவராக ஏற்பட்டனர்; அவர் அவர்களோடு எதிர்த்துப் போர் செய்து ராஜ்யமிழந்து மந்திரிகளோடுகூடி இமயமலைச்சாரலில் ப்ருகுப்ரஸ்ரவணமென்ற குன்றில் வாழ்ந்து வருகையில் அவருடைய மனைவியர் இருவரும் கருக்கொண்டனர். அவர்களுள் காளிந்தியென்பவள் தன் சக்களத்தியினல் விஷம் இடப்பெற்றனள். அவள் அங்கே வந்துசேர்ந்த ச்யவனரென்னும் முனிவரை வணங்கித் தனக்கு நல்ல புத்திரன் பிறக்கும்படி அனுக்கிரகம்வேண்டிப் பணிவிடைகள் செய்துவந்தாள். "விஷத்தோடு கூடியே உனக்கொரு நல்ல புதல்வன் பிறப்பன்" என்று அவரால் அநுக்ரஹிக்கப்பெற்ற அவள் அவ்வண்ணமாகவே விஷத்தோடுகூடிய ஒரு குமாரனைப்பெற்றுள். [விஷத்திற்கு வடமொழியில் கரம் என்று பெயர்; கரத்தோடுகூடிப் பிறந்ததனல்] ஸகரன் என்று அப்பிள்ளைக்குப் பெயர் வழங்கியது.

ஸகரனது புதல்வன்—அஸமஞ்சன். அஸமஞ்சனுடைய புத்திரன்—திலீபன்.

திலீபனுடைய புத்திரர்—பகீரதர். பகீரதருடைய புத்திரர்—ககுத்ஸ்தர்.

ககுத்ஸ்தருடைய புத்திரர்—ரகு. ரகுவின் புத்திரன்—ப்ரவ்ருத்தன்.

ப்ரவ்ருத்தனுடைய மகன்—சங்கணன். சங்கணனுடைய புத்திரர்—ஸுதர்சனர்.

ஸுதர்சனருடைய புத்திரர்—அக்நிவருணர். அக்நிவருணருடைய புத்திரர்—சீக்ரகர்.

சீக்ரகருடைய பிள்ளை—மரு. மருவின் மகன்—ப்ரசுச்ருகன்.

ப்ரசுச்ருகனுடைய மகன்—அம்பரீஷன். அம்பரீஷனது புத்திரன்—நஹுஷன்.

நஹுஷனது புதல்வன்—யயாதி. யயாதியின் புத்திரர்—நாபாகர்.

நாபாகருடைய புத்திரர்—(இந்த) தசரதர்.

இவருடைய புத்திரர்களே இந்த ராம லக்ஷ்மணர்கள்.

ஜனகமன்னரே! இங்ஙனம் பரமபவித்திரமான பெரிய வம்சத்தில் பிறந்த இக்குமாரர்களுக்காக உமது புதல்விகளை வரிக்கின்றேன்; கன்னிகாதானம் செய்யவேண்டும்—என்று கூறி முடித்தனர் வஸிஷ்டமுனிவர்.

## ஜனகர் தமது வமிசபரம்பரையைக் கூறுதலும் கன்னிகாதானவுறுதி கூறுதலும்.

இங்ஙனம் முனிவர் தசரத சக்ரவர்த்தியின் வமிசபரம்பரைகளை யெடுத்துரைத்து முடித்தபின் ஜனக சக்ரவர்த்தியும் தமது வமிசாவளியை யெடுத்துரைக்கத் தொடங்கினர்!

நிமிசக்ரவர்த்தி எனக்கு மூல புருஷர். நிமியின்புத்திரர்—மிதி.

மிதியென்பவராலேயே மிதிலாநகரம் ஏற்படுத்தப்பட்டது.

மிதியின் புதல்வர்—ஜனகர். ஜனகருடையபுதல்வர்—உதாவஸு.

உதாவஸுவின் புத்திரர்—நந்திவர்த்தனர். நந்திவர்த்தனருடைய புத்திரர்—ஸுகேது.

ஸுகேதுவின் புத்திரர்—தேவராதர். தேவராதருடையபுத்திரர்—ப்ருஹத்ரதர்.

ப்ருஹத்ரதருடைய புத்திரர்—மஹாவீரர். மஹாவீரருடைய புத்திரர்—ஸுத்ருதி.

ஸுத்ருதியின் புத்திரர்—த்ருஷ்டகேது. த்ருஷ்டகேதுவின் புத்திரர்—ஹர்யச்வர்.

ஹர்யச்வருடைய மகன்—மரு. மருவின் புதல்வர்—ப்ரதிந்தகர்.

ப்ரதிந்தகருடைய புத்திரர்—தேவமீடர். தேவமீடருடைய புத்திரர்—விபுதர்.

விபுதருடைய புத்திரர்—மஹீத்ரகர். மஹீத்ரகருடைய புத்திரர்—கீர்த்திராதர்.

கீர்த்திராதருடைய புத்திரர்—மஹாரோமர். மஹாரோமருடைய புத்திரர்—ஸ்வர்ணரோமர்.

ஸ்வர்ணரோமருடைய புத்திரர்—ஹ்ரஸ்வரோமர். ஹ்ரஸ்வரோமருக்கு இரண்டு புத்திரர்கள்;

ஜனகனென்கிற நான்—மூத்தவன்; குசத்வஜனென்பவன் எனது இளையதம்பி. எனது தந்தையாகிய ஹ்ரஸ்வரோமர் எனக்கு முடிசூட்டி, தம்பியான குசத்வஜனையும் என்னிடமே ஒப்புவித்துத் தவம்புரியக் காடு சென்று சுவர்க்கமுஞ் சென்றனர். நானும் தம்பி

-யும் ஒத்துவாழ்ந்து வருகையில் 'ஸுதந்வா' என்னும் ஓரரசன் மிதிலாநகரத்தை ஆக்கிரமிக்க விரும்பி ஸாங்காச்யா நகரத்தில் நின்றும் வந்தனன். வந்து, 'சிவ தனுசையும் சீதையையும் எனக்கே கொடுக்க வேண்டும்; இல்லையாகில் போர்புரிய நேரும்' என்று சொல்லித் தூதுவர்களை என்னிட மனுப்பினன். பிறகு அப்படியே கொடிய யுத்தமும் உண்டாயிற்று. யுத்தத்தில் அம்மன்னவனை வதை செய்து தம்பியை அந்த ஸாங்காச்யா நகரத்தில் முடி சூட்டி அரசாள வைத்தேன். ஸீதையை இராமனுக்கும், எனது புதல்வியாகிய ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும் விவாஹம் செய்து கொடுக்கக்கடவேன். இன்று மகாநக்ஷத்திரம்; அடுத்துவரும் உத்தர பல்குனி நன்னாளில் சுப முகூர்த்தம் நடைபெற வேண்டும். அதற்கு முன் மற்றைய சடங்குகளெல்லாம் குறையற நடத்தப்பட வேண்டும்—என்று ஜனகமகாராஜன் சொல்லி முடித்தனன்.

## விசுவாமித்திரர் பரதசத்துருக்கனர்களுக்காகவும் கன்னிகைகளை வரித்தலும், விவாஹச் சடங்குகளை நடத்தத் தொடங்குதலும்.

ஜனகசக்ரவர்த்தியை வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் புகழ்ந்துகூறி 'உனது தம்பியாகிய குசத்வஜனுக்கு இரண்டு பெண்கள் இருக்கிறார்களே, அவர்களையும் தசரதாத்மஜர்களான பரதசத்துருக்கனர்கட்கு விவாஹம் செய்து கொடுக்குமாறு கோருகிறோம்' என்ன, அது கேட்ட ஜனக மன்னவன் மிகமகிழ்ந்து அங்ஙனமேயாகுக வென்றிசைந்து ராஜகுமாரர் நால்வர்க்கும் ஒரு நாளிலேயே விவாஹமுகூர்த்தம் நடைபெறும்படி திட்டஞ் செய்தனன். அடுத்த நன்னாளாகிய உத்தரபல்குனி நக்ஷத்திரம் விவாஹத்திற்கு மிகச் சிறந்திருப்பதால் அன்றைக்கே சுபத்தை நடைபெறுத்தவேணுமென்று நிச்சயஞ் செய்தனன். இத்தகைய சிறந்த ஸம்பந்தம் தங்களுக்கு நேர்வதைப் பற்றி ஜனகதசரதர்கள் ஒருவர்க்கொருவர் மிக்க குதூஹலம் பாராட்டிப் பரமானந்தம் பொலிய வார்த்தையாடிக் கொண்டனர். மேல் செய்யவேண்டிய சடங்குகளை முறைவழுவாது நிறைவேற்றுதற் பொருட்டுத் தசரதர் வஸிஷ்ட விசுவாமித்திரர்களுடன் தமது விடுதிக்கு வந்து சேர்ந்தனர். விவாஹ மஹோத்ஸவத்திற்காக நடைபெறவேண்டிய சடங்குகள்யாவும் அடைவுபட நடைபெற்று வருகின்றன. அந்தணர்கட்கு விசேஷமாகக் கோதானங்கள் செய்யப்பட்டன. மற்றும் பலவகைப் பொருள்களும் அந்தணர்கட்கு வழங்கப்பட்டன.

## ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்துருக்கனர்களுக்கு விவாஹ மகோத்ஸவம் நடந்தமை கூறல்.

இந்நிலைமையில் கேகய நாட்டிலிருந்து, தசரதாத்மஜனான பரதனுடைய அம்மானாகிய [கேகயராஜ புத்திரரான] யுதாஜித் தென்பவர் மிதிலாபுரியில் வந்து சேர்ந்து க்ஷேமசமாசாரங்கள் கூறினர். "பரதனைக் காணவிரும்பிய என் தந்தை அவனையழைத்துவரும்படி என்னையனுப்பினர்; நான் அயோத்திமா நகரில் வந்து விசாரிக்கையில், விவாஹத்தின் பொருட்டு யாவரும் இவ்விடம் வந்திருக்கிற செய்தியையறிந்து நானும் இவ்விடம் வந்து சேர்ந்தேன்" என்றும் கூறினர்.

தசரதர் அவர்க்கு முறைப்படி உபசாரங்கள் செய்தனர். மறுநாட் காலையில் யாவரும் கலியாண மண்டபத்திற்கு வந்து கூடினர். சிறந்த சுப முகூர்த்தத்தில் இராமபிரான் தம்பிமார்களுடன்கூட வஸிஷ்டர் முதலிய முனிவர்களை முன்னிட்டுக்கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தபின் வஸிஷ்டர் ஜனகமன்னவனை நோக்கி, 'மன்னர் பெருமானே!

கன்னிகாதானம் செய்யவேண்டிய கடமை உன்னுடையதாதலால் அதனை இனி நிறைவேற்ற வேண்டும்' என்று கூற, அதற்கு ஜனகன் 'முனிவரேறே! இதில் என்ன ஆலோசனை யிருக்கிறது? கன்னிகைகளும் மங்கள காரியங்களெல்லாம் செய்து முடித்து விவாஹ வேதியின்கண் சித்தர்களாக இருக்கின்றார்கள்; நானும்இதோ ஸஜ்ஜனுகவே யிருக்கின்றேன்; இனி விவாஹச் சடங்கு தாமதமின்றியே நடைபெறலாம்; முற்றும் தேவரீர் முனிவர் களோடு கூடி முறை தவறாது நடைபெறுத்த வேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்தனன்.

அதற்கு இசைந்த வஸிஷ்டபகவான் வைதிககாரியங்களான ஹோமம் முதலியவற் றைக் குறையறச் செய்யத் தொடங்கினர். பிறகு ஜனக மன்னவன் ஸகல பூஷணங்களா லும் அலங்கரிக்கப்பட்டு மிக விளங்கும் ஸீதாபிராட்டியை அக்னிக்கு முன்பாக அழைத்து வந்து இராமனெதிரில் நிறுத்திக்கொண்டு,

"இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ,
ப்ரதீச்சசைநாம் பத்ரம் தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா."

[இதன் பொருள்:—இந்த ஸீதை எனது மகள்; நீர் அநுஷ்டிக்கவேண்டிய ஆச்ரித ரக்ஷணமாகிற தருமத்தை அநுட்டிப்பதில் இவள் உமக்குத் துணையாக இருக்கத் தகுந்த வள்; ஒரு குறையுமின்றி நீர்வாழ்க. உமது கையினுல் இவளது கையைப் பிடித்துக்கொள் ளும்.] என்று சொல்லித் தாரை வார்த்துத் தத்தஞ் செய்தனன். அப்பொழுது தேவர்க ளும் முனிவர்களும் வாழ்த்துக்கூறிப் பூமழை பொழிய, மங்கள வாத்ய கோஷமும் உண்டா யிற்று.

அந்த முகூர்த்தந்தன்னிலேயே ஜனக மன்னவன் தனது புதல்வியான ஊர்மிளையை லக்ஷ்மணனுக்குக் கன்னிகாதனம் செய்தனன். குசத்வஜரின் பெண்களுள் மாண்டவியென் பவள் பரதனுக்கும், ச்ருதகீர்த்தியென்பவள் சத்ருக்கனனுக்கும் கன்னிகாதானம் செய்யப் பட்டனர். இங்ஙனம் தாசரதிகள் நால்வர்க்கும் திருமணம் குற்றமற நிறைவேறியது. அப்போழ்து பலவகையான சுபக்குறிகள் தோன்றின. இங்ஙனம் நிகழ்ந்தபின்பு அவரவர் கள் தம் தம் விடுதிகட்குச் சென்று சேர்ந்தனர்.

வால்மீகிராமாயண ஸாரத்தில் ஸீதா விவாஹ கெட்டம்—(5) முற்றிற்று.

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ந ஸமேத ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

## ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹம் — ஆநந்தமயாதிகரண ஸித்தாந்தம்.

(முன்தொடர்ச்சி.)

முண்டகோபநிஷத்தில் "யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:, தஸ்மா தேதத் ப்ரஹ்ம நாம ரூபமந்நஞ் ச ஜாயதே" என்று பரப்ரஹ்மத்திற்கு ஜகத்ஸ்ருஷ்டிக்கு வேண்டிய ஸர்வஜ்ஞத்வத்தைச் சொல்லி உடனே ஸ்ருஷ்டிகர்த்ருத்வத்தைச் சொல்லியிருப்பதுபோல இங்கும் மேலே சொல்லப்படப்போகிற ஜகத்ஸ்ருஷ்டிக்கு உபயுக்தமான ஸர்வஜ்ஞத்வத்தை முன்னே சொல்லி உடனே ஸ்ருஷ்டிகர்த்ருத்வம் சொல்லுவதாக நன்கு தெரியவருகிறது. ஆதலால் இங்கு விபச்சித் சப்தத்தினல் சொல்லப்படுகிற ஸர்வஜ்ஞத்வத்திற்கு உபாதியொன்றும் சொல்லப்படாமையினல் நிருபாதிகமான ஸர்வஜ்ஞத்வமே சொல்லிற்ருக விளங்குகிறது. அப்படிப்பட்ட நிருபாதிக ஸர்வஜ்ஞத்வம் முக்தாவஸ்தையில்கூட ஜீவனுக்கு ஸம்பவிக்கமாட்டாதாகையினலே, ப்ராப்யமாக ஓதப்பட்ட ப்ரஹ்மம் பத்தாவஸ்தையிலும் முக்தாவஸ்தையிலுமுள்ள ஜீவனிற்காட்டிலும் வேறுபட்டதென்றே நிச்சயிக்கப்படுகிறது. ஆகவே, நிருபாதிக ஸர்வஜ்ஞத்வத்தையுடைய இந்த ப்ரஹ்மத்திற்கே *தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந:* என்கிற மேல்வாக்யத்தில் ஆத்மத்வத்தையோதி, ஸ்தூலாருந்ததீந்யாயத்தின்படி அந்த ஆத்மா * அந்யோந்தர ஆத்மா ஆனந்தமய: * என்று உபஸம்ஹரிக்கப் படுவதாக விளங்குகின்றது. ஆதலால் இந்த ஆநந்தமயாத்மா ஜீவனல்லவென்று நன்கு தேறுகின்றது.

ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹத்தில் ஆனந்தமயாதிகரணம் முற்றிற்று.

---

# அந்தரதிகரணம் (7)

கீழ் ஆனந்தமயாதிகரணத்தில் ஆனந்தமயன் பரமபுருஷனேயென்று நிஷ்கர்ஷிக்கப் பட்டாலும், ஆனந்தமயனுன புருஷன் ஜீவனுக இருக்கலாமென்று வேறொரு ப்ரகாரமாக சங்கையுண்டாக, அதைப் பரிஹரிக்கும் பொருட்டு இந்த அதிகரணம் ப்ரவர்த்திக்கிறது.

*𑌅𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑍋𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍—அந்தஸ் தத்தர்மோபதேசாத். **1—1—21.**

இங்கு * பேதவ்யபதேசாச்சாந்ய: * என்கிற மேல் ஸூத்ரத்திலிருந்து அந்ய: என்கிற பதம் வருவித்துக்கொள்ளப்படுகிறது. அந்த:—ஆதித்யமண்டலத்தினுள்ளே உறையும் புருஷன், அந்ய:—ஜீவனைக்காட்டிலும் வேறுபட்ட பரமபுருஷன்; தத்தர்மோபதேசாத்—அந்த பரமபுருஷனுக்கே அஸாதாரணமாகவுரிய தர்மங்களை இங்கு ஓதியிருப்பதனலே—என்று ஸூத்ரத்திற்குப் பொருள்.

சாந்தோக்ய உபநிஷத்தில் * 𑌅𑌥 𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 *[அத ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே] என்று தொடங்கியுள்ள பகுதிக்கு அந்தராதித்யவித்யை யென்று பெயர். அந்த வித்யாப்ரகரணத்தில் * 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌶𑍍𑌮𑌶𑍍𑌰𑍁𑌰𑍍𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌕𑍇𑌶𑌃 𑌆𑌪𑍍𑌰𑌣𑌖𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌯𑌥𑌾 𑌕𑌪𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌮𑍇𑌵𑌮𑌕𑍍𑌷𑌿𑌣𑍀, 𑌤𑌸𑍍𑌯𑍋𑌦𑌿𑌤𑌿 𑌨𑌾𑌮; 𑌸 𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑍍𑌮𑌭𑍍𑌯 𑌉𑌦𑌿𑌤𑌃 𑌉𑌦𑍇𑌤𑌿 𑌹 𑌵𑍈 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑍍𑌮𑌭𑍍𑌯𑍋 𑌯 𑌏𑌵𑌂 𑌵𑍇𑌦—ஹிரண்யச்மச்ருர் ஹிரண்யகேச: ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண:, தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ, தஸ்ய உதிதி நாம, ஸ ஏஷ

ஸர்வேப்ய: பாப்மப்ய உதித:, உதேதி ஹ வை ஸர்வேப்ய: பாப்மப்யோ ய ஏவம் வேத.'' என்று ஓதப்பட்டுள்ளது. இங்கு ஆதித்ய மண்டலத்தினுள்ளே உறையும் புருஷனுக்கு *யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்பதனால் செந்தாமரைபோன்ற கண்ணுடைமையைச் சொல்லியிருப்பதனாலும், அபஹதபாப்மத்வத்தில் பர்யவஸிக்குமதான ஸர்வபாப்மோதிதத்வம் சொல்லியிருப்பதனாலும், ஸர்வபாப விநிர்முக்தத்வமாகிற மோக்ஷ புருஷார்த்த ப்ராப்திக்கு உபாயமான உபாஸநத்திற்கு விஷயபூதமான வஸ்துவென்று சொல்லியிருப்பதனாலும், அபஹத பாப்மத்வமாகிற லிங்கத்தினால் * ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண: * என்று ஸுபாலோபநிஷத்தில் அபஹத பாப்மாவாக வோதப்பட்ட நாராயணனை நினைப்பூட்டுவதனாலும், மோக்ஷத்திற்கு உபாயமான உபாஸநத்திற்கு விஷயபூதமாகச் சொன்னதனால் * தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி * என்று புருஷ ஸூக்தத்தில் சொல்லப்பட்ட மஹா புருஷனை நினைப்பூட்டுவதனாலும், புண்டரீகாக்ஷத்வம் நாராயணனிடத்திலேயே ஸுப்ரஸித்தமாகையாலும், ஆக இவ்வளவு உபபத்திகளைக்கொண்டு ஆதித்யமண்டலத்தினுள்ளுறையும் புருஷன் பரமபுருஷனென்றே நிர்ணயிக்கப்படுகிறது.

இங்கு பூர்வபக்ஷம்;—கீழ் ஆநந்தமயாதிகரணத்தில் * தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா * என்று ஆநந்தமயாத்மாவுக்கு சரீரஸம்பந்தம் சொல்லி யிருக்கையாலே ஆனந்தமயன் சரீரஸம்பந்தமுள்ள ஜீவனாகத்தானிருக்க வேணுமென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமானபோது 'நிருபாதிகமான ஆனந்தமுடைமை' என்பது முதலான ஹேதுக்களினால் ஜீவனிற்காட்டில் வேறுபட்டவனே ஆனந்தமயனென்று ஸாதிக்கப்பட்டது. அது பொருந்தாது. ஏனென்னில்; அவ்விடத்தில் அந்த ஆனந்தமயனுக்கு * [illegible] * [ஸ யச்சாயம் புருஷே, யச்சாஸாவாதித்யே, ஸஏக:] என்று ஆதித்யனென்கிற தேவதாவிசேஷத்தோடு ஐக்யம் சொல்லி யிருக்கையாலும், ஆதித்யனாகிற அந்த தேவதாவிசேஷத்திற்கு அந்தராதித்ய வித்யையில் கேசம் ச்மச்ரு நகம் கண் முதலியவற்றோடு கூடிய மிகரமணீயமான சரீரமுடைமை சொல்லி யிருக்கையாலும், அந்த சரீரமானது மிகுந்த புண்ய விசேஷ மாத்திரத்தினால் அமைந்ததென்னுமிடம் அங்கே ஸர்வபாபராஹித்யம் சொல்லி யிருப்பதாலே ஸித்திக்கிறபடியாலும், அப்படிப்பட்ட சரீரஸம்பந்தத்தையே ஆனந்த வல்லியில் சாரீர சப்தத்தினால் க்ரஹிப்பது உசிதமாயிருப்பதனாலும், அப்படிப்பட்ட சரீரமுடைமை அகர்மவச்யமென்று அபிமானிக்கப்படுகிற பரப்ரஹ்மத்தினிடத்தில் ஸம்பவிக்கமாட்டாதாகையாலும் ஆதித்யனென்கிற ஒரு ஜீவனே மிகுந்த புண்ய விசேஷவசத்தினால் ஐச்வர்ய விசேஷத்தை யடைந்தவனாகி ஜகத்காரண பூதனாக ஆனந்தவல்லியில் ப்ரதிபாதிக்கப்படுகிறான்—என்று.

இந்தப் பூர்வபக்ஷத்தின்மேல் ஸித்தாந்தம் வருமாறு;—இவ்விடத்தில் ஆதித்ய மண்டலத்தினுள்ளுறையும் புருஷனுக்கு மிகுந்த புண்ய விசேஷமடியாகவரும் சரீரவிசேஷஸம்பந்தம் சொல்லப்படுவதன்று. ஏனெனில், தஹர வித்யாப்ரகரணத்தில் * [illegible] ந ஸுக்ருதம் ந துஷ்க்ருதம் ஸர்வே பாப்மானோதோ நிவர்த்தந்தே, அபஹத பாப்மா ஹ்யேஷ ப்ரஹ்மலோக: * என்கிற விடத்தில் சொல்லப்பட்ட அர்த்தமே இங்கு [அந்தராதித்ய வித்யையில்] * ஸ ஏஷ ஸர்வேப்ய: பாப்மப்ய உதித: * என்பதனால் நினைப்பூட்டப்படுகிறபடியினாலே ஸுக்ருதமும் துஷ்க்ருதமுமாகிற இருவகைக் கருமங்களும் அடியோடு இல்லாதவொரு வ்யக்தியே ஆதித்ய மண்டலத்திலுள்ளதாக ஸ்பஷ்டமாய் விளங்குகிறது. ஆகவே

இங்கு உத்தேசிக்கப்படுகிற சரீரம் மிகுந்த புண்யவசத்தினாலாயது என்று சொல்வதற்குப் பொருத்தமில்லை. பின்னையோ வென்னில், * ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்—ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் * என்பது முதலான ச்ருதிகளில் ப்ரஸித்தமாய் ஸ்வேச்சையினால் பரிக்ரஹிக்கப் பட்டதாய் அப்ராக்ருதமான சரீரமேயாகும்.

கர்மவச்யனுக்குத்தான் சரீரமுடைமை கூடுமென்றுவது, அகர்மவச்யனுக்கு சரீரமுடைமைகூடாதென்றுவது சொல்லப்போகாது. பகவான் அகர்மவச்யனாயிருக்கச் செய்தேயும் ஸத்யஸங்கல்பனை தன்னுடைய இச்சையினாலே சரீரபரிக்ரஹம் பண்ணக்குறையில்லை. இதற்குமேல் சொல்லக்கூடும்—த்ரிகுணாத்மக ப்ரக்ருதி பரிணாமரூபமான பூதஸங்காதந்தானே சரீரமென்பது; அபஹதபாப்மாவாயும் ஸத்யஸங்கல்பனாயுமிருக்கிற பரமபுருஷன் இச்சித்தாலுங்கூட அந்த சரீரத்தின் ஸம்பந்தம் கூடாதே; அது ஹேயமாகையாலே. கர்மவச்யனான புருஷனுக்கோவென்னில், அவன் கர்மாநுகுணமான பலன்களை யனுபவிக்க வேண்டியிருப்பதனாலே, சரீரஸம்பந்தத்தை வெறுத்துத் தள்ளினாலுங்கூட அது தவிரமுடியாமல் வந்து சேர்ந்தேதீரும்; அகர்மவச்யனென்று இசையப்படுகிற பரமபுருஷனுக்கு எந்த விதத்திலும் சரீரஸம்பந்தம் யோக்யமாகாது—என்று சோத்யம் செய்யக்கூடும்.

பகவானுக்கு குணத்ரயமயமாய் ப்ராக்ருதமான தேஹம் உள்ளதென்று யாரேனுஞ் சொன்னால் கீழ்க் கூறிய ஆக்ஷேபம் பண்ணத்தகும். ஸ்வாபிமதமும் ஸ்வாநுரூபமும் அப்ராக்ருதமுமான சரீரம் பகவானுக்கு இசையப்படுகின்றதே யன்றி குணத்ரயமயமாய் ப்ராக்ருதமான தேஹம் உள்ளதாக இசையப்படவே யில்லை. வேதாந்தங்களானவை பகவானுக்கு ப்ராக்ருத ஹேய குணங்களையும் ப்ராக்ருத ஹேய தேஹஸம்பந்தத்தையும் அதடியாக விளையக் கூடிய கர்மவச்யத்வஸம்பந்தத்தையும் நிஷேதித்து கல்யாண குணங்களையும் கல்யாண ரூபத்தையும் ஓதுகின்றன. பகவான் உபாஸகர்களிடத்திலுள்ள அநுக்ரஹாதிசயத்தினாலே அவரவர்களுடைய ப்ரதிபத்திக்குத் தக்கவாறு தன்னுடைய ஒளியுருவத்தையே ஸ்வேச்சையினாலேயே தேவமநுஷ்யாதி ஸம்ஸ்தாநமாக ஆக்குகிறானென்று உபநிஷத்துக்கள் ஓதுகின்றன. * அஜாயமாநோ பஹுதா விஜாயதே—அஜாயமாநோ பஹுதா விஜாயதே * என்கிற ச்ருதியும், * அஜோபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா—அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாமீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா * என்கிற கீதா ச்லோகமும் இங்கு அநுஸந்தேயங்கள். * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே—பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே. * என்கிற கீதாச்லோகம் விசேஷித்து அநுஸந்தேயம்.

இவ்விடத்தில் உபயவேதாந்த ரஸிகர்களுக்கு ஒரு சிறந்த விஷயம் நினைப்பூட்டவேண்டியதுண்டு; ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யும்போது ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளை இடைவீடின்றித் திருவுள்ளத்தில் சிந்தனை செய்துகொண்டே யிருந்தாரென்று முன்னோர்கள் மொழிந்திருப்பதுண்டு. அது உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த அறிவுபெற்ற மஹான்களுக்கே அறியவெளிது. இதற்குச் சான்றாக எடுத்துக் காட்டக் கூடிய விடங்கள் பலவுண்டு. ப்ரக்ருதம் இந்த ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் உள்ளதான அரிய பெரிய விஷயமொன்று இங்கு நிரூபிக்கப்படுகிறது. இவ்விடத்தில் பரம புருஷனுக்கு சரீரஸம்பந்தம் கிடையாதென்று பூர்வபக்ஷவாதத்தில் ப்ரஸக்தமானதை ஸ்வாமி கண்டிக்கு

மிடத்து ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் சரீர பரிக்ரஹம் பகவான் செய்தருளுகிற படியை நிரூபித்து வருகையில் * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் * என்கிற கீதா ஸூக்தியை யெடுத்துக் காட்டி, * ஸாதுபரித்ராணமேவோத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாச:, ஸங்கல்பமாத்ரேணாபி தது பபத்தே:—ஸாதுபரித்ராணமேவ உத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாச:, ஸங்கல்பமாத்ரேணாபி ததுபபத்தே: * என்றுள்ளது ஸ்ரீ பாஷ்ய ஸூக்தி. எம்பெருமான் அவதாரம் செய்தருள்வது ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவுமானாலும் ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதொன்றே உத்தேச்யம்; துஷ்டர்களைத் தொலைப்பதென்பது ஸங்கல்ப மாத்திரத்தினாலும் ஆகக் கூடியதாதலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதானமன்று—என்பது மேலெடுத்துக் காட்டிய ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின் கருத்து. துஷ்டர்களைத் தொலைப்பது ஸங்கல்பஸாத்யமாகிறாப்போலே ஸாதுபரித்ராணமும் ஸங்கல்ப ஸாத்யமாகக் கூடாதோ? “துஷ்டர்கள் நஷ்டர்களாகக் கடவர்கள்” என்று ஸங்கல்பிப்பதுபோல, “ஸாதுக்கள் ஸம்ரக்ஷணம் பெறக் கடவர்கள்” என்றும் பகவான் ஸங்கல்பிக்கமுடியுமன்றே. அப்படியிருக்க, துஷ்ட சிக்ஷணமே ஸங்கல்பத்தால் ஸாத்யமென்றும் சிஷ்ட பரிபாலனம் ஸங்கல்ப ஸாத்யமன்று என்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் எதுகொண்டு ஸாதிக்கிறாரென்று ஆராயுமளவில், நம்மாழ்வாருடைய ஸுஸ்பஷ்டமான ஸ்ரீ ஸூக்தியைக் கொண்டே ஸாதிக்கிறாரென்று நன்கு விளங்குகிறது. அதை விவரிப்போம்;

திருவாய்மொழியில் (3—1—9.) * மழுங்காத வைநுதிய சக்கரநல்வலத்தையாய், தொழுங் காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே * என்கிற பாசுரம் பரமபோக்யமானது. எம்பெருமான் ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய கூக்குரலைக் கேட்டு அரை குலையத் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடிவந்துவிழுந்தானென்கிற இதிஹாஸம் ப்ரஸித்தமானது. எதற்காக வோடிவரவேண்டும்? * கருதுமிடம் பொருதுவரவல்ல திருவாழியாழ்வானைத் திருநாட்டிலிருந்தே ஏவினால் அவன் ஒரு நொடியில் யானையின் இடரைத் தீர்த்துவரமாட்டானோ? அவனுக்குத் தான் ச்ரமம் கொடுக்கவேண்டுமோ? ஸகல ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் கருவியாயுள்ள ஸங்கல்பத்தினால் யானையினிடரை அவலீலையாகத் தீர்த்திருக்கலாமே. இவ்விரண்டுபடியுமின்றிக்கே அறப்பதறியோடி வந்தது எதற்காக? என்று நம்மாழ்வார் கேள்வி கேட்டுக் கொண்டு ஸமாதானத்தையும் தாமே யருளிச் செய்துள்ளார். * தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே * என்கிற இரண்டாமடிதான் ஸமாதானம். கஜேந்திராழ்வான் தன்னெதிரே வந்து நின்ற பகவானை நோக்கி * நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ * என்றான். [என்றேனுமொருநாள் அழிந்தே போகக் கூடியதான இவ்வுடலுக்காக நான் கதறவில்லை; எம்பெருமானே! உன்னை நேரில் ஸேவித்து உன் பொற்றாமரையடிகளில் இத்தாமரை மலர்களைப் பணிமாறுவதற்காகவே கதறினேன் என்றான்.] இப்படிப்பட்ட ஆவல் கொண்ட பக்த சிகாமணிகளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்டமுடியாதென்பதையும் அப்பாசுரத்தில் பின்னடிகளில் ஆழ்வார் தாமே விவரித்துக் கூறியுள்ளார். நேரில் அவதரித்துத் திருமேனியைக் காட்டியே அன்பர்களைக் காக்கவேண்டும்—என்று ஆழ்வாரருளிச் செய்த அர்த்தத்தையே இங்கு ஸ்வாமி உயிராகக் கொண்டு பணித்தாராயிற்று.

[தொடரும்.]

# 'THIRUPPAVAI'

OR

# HYMNS TO THE BEAUTEOUS GRACE.

### 3, An Allegorical Pastoral Lyric.—(Continuation)

It looks as though we are suddenly transported to the golden age of Sri Krishna, and are made quite familiar with the sweet sights and melting notes of Gokulam so that we might more truly exclaim,

"Bliss was it in that great dawn to be alive,
When, to be young, was very heaven"—

To be young and fair, and a maiden of bashful beauty and charm to captivate the heart of Sri Krishna—that were a thing most lovingly to be wished! Who would not throw away all wealth, noble birth, and renown, and cast learning and pride to the winds—if one could barter for these—an admission into the society of the charming, unlettered village belles of Brindavan. How lucky are we!

We enter at once into Gokulam, the loveliest and richest village that eyes have ever seen, where copious showers fall thrice a month, where lilies blue blossom sweet, where the mottled bee slumbers soft on lotus-beds, where the rich red paddy yields a golden harvest, where the noble milch-kine fill pots after pots with milk in such abundance that the wayside is all miry with milk, where the larks sing in unison as the peacocks dance, and where, in short, there is nothing but sweetness and calm, and eternal beatitude. In such a village Sri Krishna was the centre of all love-episodes, and the cynosure of all gopis' eyes. It was His magic flute that cast its slumberous spell over the whole atmosphere, creating a rapture and harmony far beyond words to describe.

### 4. The Ritual

Whenever the rains failed, it was the custom among the villagers to undertake a festive vow, and invoke the blessings of the Rain-God for granting them a boon of heavy down-pour so that the land might be rid of all poverty and gloom. Kathyayani, the Goddess whose image was worshipped on such occasions, was supposed to shower Her grace upon Her devotees. Symbols were used during the time of worship, such as "the Big Drum, conches, flags, beauteous lamp, and canopy"—and these are all described in hymn 26 of Thiruppavai. Probably

the drum or "the Parai" was the most significant of them all, since it proclaimed the advent of the festival, and brought the distant near, sending its reverberations far and wide. This word "Parai" is used in different senses in different hymns, and indicates not only the festive vow, and service to humanity and their happiness which it implied, but also figuratively the divine bliss, which is the final object of attainment. "Parai"—thus represents both the means and the end. (Refer to Hymns 1, 8, 10, 16, 24, 25, 26, 27, 28, 29, 30)

Similarly the word "Pavai"—or the Beautiful image"—after whom the poem itself is named signifies the Magnetic Mother of Divine Grace, whose blessings alone could make the festive vow a success, and whose charm pervades the musical refrain of every stanza—"El Or Empavai!"—which may be translated as—"May our Goddess bless the vow!". Her devotees,—and what a sweet throng they are!—each, with a distinct individuality,—are but counterparts of the Divine Mother, and are gracefully addressed as "Impish Girl! Queen of maids! Resplendent one! jubilant image of beauty! Precious jewel! Darling queen!"—enriching epithets of endearing tenderness which sit sweetly on the tongue, fall softly on the ears, and enter charmingly the heart. The rituals do not matter at all;—they are only a means to an end. Nor does Katyayani obtrude herself—She is kept in the back-ground, like the musical refrain itself.

The sweetness of Sri Bhagavatam is presented to us as in a dream-picture. The sleeping humans souls are likened to the Gopis of old, and they are awakened from their sleep to enjoy divine bliss. There is no spirit of rivalry or selfishness in seeking to obtain the Lord's Grace. The spirit which animates the poem is one of selfless bliss whose value is enhanced by the commingling and participation by all aspirants to God's love. The greater the number of the beloved souls who wake up from their sleep for a journey to the ennobling River of Bliss for a bath, the greater is the happiness derived from it.

"Immersion in the sea of the Lord of Glory
Immersion from which there is no extrication,
As it were identification with the very ocean".

## 5. The Poem

### MAIN TRENDS

As the thought of the festive vow enters their minds, the Gopis find that it is a full moon day, and the bright moon seems to smile upon them as a good

augury for the success of their undertaking. An aspiration for divine bliss—a keen desire to dive in the River of Bliss—is the only trait needed to join the company of the wealthy damsels of the rich herdsmen's village. They alone are wealthy whose minds are turned towards God and are ever bent on pleasing service to humanity. The Lord's Grace is a foregone conclusion—the inevitable fruit on the top of the tree of life

## HYMN 2

The ritual to be observed is indeed rigorous—enjoining discipline, but the path of bliss is delightful, and the devotees therefore resolve to follow the straight traditional method,—avoiding all slander and evil from their thoughts.

## HYMN 3

The devotees, in the observence of their festive vow, resolve to chant the various names of Lord Purushothama while taking their holy bath so that the rain may fall thrice a month and increase the fertility and natural wealth of the world.

## HYMN 4

Lord of the Rain-bearing cloud! Stint thou not anything from us;
Plunging into the deep, and sucking its waters, rise thou upwards resounding,

1

And grow thou dark of form, like the Primal First,

2

And in the hand of Padma-nabha beauteous-shouldered,

3

Glitter thou like His disc;—and thunder forth like His conch;
And, delaying not, like a shower of arrows pressed from His bow (Sarnga)
To bless the earth, pour thou down in torrents,
So we too might bathe happily in Margali.

---

1. God, as Lord Narayana, was the creator of all worlds.
2. Vishnu, the lotus-navelled.
3. The conch, the disc and the bow (Sarnga) are Vishnu's weapons. A delightful comparison of the blue cloud to Lord Vishnu, and of the lightning, thunder, and rain to His weapons, the disc, the conch and the bow.

## HYMN 5

The Elusive One[1], the Prince of glorious Mathura North[2],
The soul of the pure, puissant yamuna ghat[3],
The beauteous lamp, born in a cowherd's family[4];—
Damodara[5], who illumined His mother's womb;—
Him, if we approach pure, and offer flowers fresh,
As we sing out with our mouths, and dwell on Him with our minds,—
Our sins bygone, and standing by,
Will consumed be like shreds in fire. Speak thou on.

1. **Elusive**—sometimes appearing as an ordinary human being; sometimes revealing His divine nature.
2. Mathura North—as opposed to Mathura south (Muttra and Madura)
3. At the touch of child Sri Krishna's feet, the waters of the yamuna became pure.
4. Krishna's upbringing among cowherds sanctified them.
5. Literally "the child with a cord round the waist" to keep it out of mischief!

---

## HYMN 6

The birds, hark!. how they chirp!, From the shrine of the Bird-King's Lord[1],
The loud blast of the white hallooing conch, heard you not?
Gentle girl! wake up. Sucking the poison from the demon's breast[2],
And hurling the wheel[3] deceptive to ruin shapeless with legs upraised,
The Primal One sleeps calm on the serpent[4] in the Main.
Holding Him dear in their inmost hearts, the sages and the saints,
Gently wake up;—and their loud chants of "Hari"[5]
Reach the soul's depth with coolness endearing.

## ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபாவுக்கு 12—0—0 செலுத்திய மெம்பர்கள்.

63. A. V. ராஜகோபாலாசாரியர், ஸிகிந்தராபாத் டக்கன்.
64. ஸ்ரீஸ்வாமி கோவர்த்தனம் ஸ்ரீநிவாஸாசார்ய மஹாராஜ், பிருந்தாவனம்.
65. V. ஸ்ரீநிவாஸாசாரியர், சிந்தாதிரிப்பேட்டை சென்னை.
66. P. கிருஷ்ணய்யங்கார், பாகவத புரோகிதர், குகை; சேலம்.
67. S. ஸ்ரீநிவாஸய்யங்கார், (பென்ஷனர்) புதுடில்லி.
68. R. V. ராஜு ஐயா, வர்ண வியாபாரம் திருச்சிராப்பள்ளி.

## ஷெ ஸபையில் லைப் மெம்பர் பதவியை ஏற்றுக்கொண்டவர்

N. கோபால ஸ்ரீநிவாஸய்யங்கார், கீழநத்தம். (திருநெல்வேலி ஜில்லா.)

## ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகைக்கு 4—0—0சந்தா செலுத்தியவர்கள்

95. K. R. ஸ்ரீ ரங்காசாரியர், வக்கீல் சிதம்பரம்.
96. திரு. கி. ராமாநுஜய்யங்கார். செந்தமிழ்ப்பத்திராதிபர் மதுரை.
97. வித்வான். A. கோபாலய்யங்கார்ஸ்வாமி, ஸ்ரீ ராமாநுஜ ஸம்ஸ்க்ருத கலாசாலாத்யக்ஷர். வானமாமலை.
98. R. ராகவையங்கார், Head clerk & accountant, D.M.E. office மதுரை.
99. K. R. ஆராவமுது ஐயங்கார், Bombay.
100. S. பார்த்தஸாரதி, Mettur Dam (Salem Dt.)

---

குறிப்பு :—யாருடைய பெயராவது விட்டிருந்தால் தயவு செய்து தெரிவிக்கக் கோருகிறோம்.

ஸ்ரீ ராமாநுஜன் ஆசிரியரான P. B. அண்ணங்கராசாரியஸ்வாமிகள் பதரிகாச்ரம யாத்திரையாக 13—5—49-ல் புறப்பட்டுச் சென்று 15—7—49-ல் திரும்பி வருவார்கள். லெட்டர்கள் காஞ்சீபுரம் விலாஸத்திற்கே எழுதலாம்.

இப்படிக்கு,
மானேஜர். 9-5-49.

---

அடியேன் செய்யும் விண்ணப்பம்.—தொடர்ச்சி

முடிவில் முக்கியமான வொரு வார்த்தை. பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளை ஸம்ரக்ஷிப்பதற்கென்று அட்வகேட் ஸ்வாமி விசேஷநிதி வைத்திருப்பது யாவர்க்கும் பரம ஸந்தோஷகரம். பெரியவாச்சான்பிள்ளையிடத்திலும் மற்றுமுள்ள திருக்குருகைப் பிரான் பிள்ளான் முதலான திவ்யப்ரபந்த வ்யாக்கியான கர்த்தாக்களிடத்திலும் பகைமை பூண்ட பிறர்கள் அவர்களுடைய வியாக்கியானங்களை மிகவும் கேவலமாக இழித்துரைத்துப் பிரசுரம் செய்து வருகிறார்கள். அப்படிப்பட்ட வொரு பழிப்புப்புத்தகம் 150 பக்கம் அச்சாகி ஒரு நண்பரிடத்தில் மதிப்புரைக்கு வந்திருக்க இன்றே கண்டேன். பெரியவாச்சான்பிள்ளை முதலானவர்கள் இயற்றிய வியாக்கியானங்கள் தமிழ் நெறிக்கு அடியோடு இணங்காதவை யென்றும் அவர்கள் கொண்ட பாடங்களும் மிகவும் தப்பானவை யென்றும் அதில் கோஷிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட துஷ்பிரசாரங்களைத் தொலைக்க முன் வருவது தான் இப்போதைக்கு முக்கியமானதென்று தெரிவித்து நிற்கிறேன்.

K. திருவேங்கடாசாரி, B.A., B.L., Advocate,
1, Badriagarden St., P. T. Madras. 7—5—49.

(சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் அங்கத்தினர்.)

